# சொல்வயல்

திங்கள் மின்னிதழ்

சொல்வளமே மொழிவளம் நெல்வளமே நாட்டின்வளம்

" சொற்குவை தேரும் பாவலர் மேவத் தொகுப்பீடம்"
(திருவிளையாடற்புராணம்–
தருமிக்குப் பொற்கிழியளித்த படலம்)

ஐ.எஸ்.பி.என் (ISBN): 978-81-958032-0-0

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் வெளியீடு

வயல் : 5 விளைச்சல் : 54 திருவள்ளுவர் ஆண்டு 2055, நளி – நவம்பர் – 2024



# விதை ஆய்வுத் துறைக் கலைச்சொற்கள்

| | | |
|---|---|---|
| Air–screen machine | – | தூற்றுப்பொறி |
| Bacterial blight | – | நுண்மி வெப்பு நோய் |
| Bag–closer | – | பை தையல் பொறி |
| Biennials | – | இருகாலப் பயிர் |
| Board cost crops | – | கை விதைப்பு |
| Bold sized seed | – | பெரு விதை |
| Bottom sieve board | – | கீழ்ச்சல்லடை |
| Certification agency | – | விதைச் சான்று முகவாண்மை |
| Certified seed | – | சான்றுபெற்ற விதை |
| Cow pea | – | தட்டைப் பயறு |
| Dead seed | – | முளைக்கா விதை |
| Designated disease | – | குறிப்பிட்ட நோய் |
| Dormancy | – | விதை உறக்கம் |
| Fibre crops | – | நாரப் பயிர்கள் |
| Flowering stage | – | பூக்கும் பருவம் |
| Fruit stage | – | பழுக்கும் பருவம் |
| Graded seeds | - | தரம் பிரித்த விதைகள் |
| Hard seed | – | கடின விதை |
| Late sowing | – | பின்பருவ விதைப்பு |
| Maturity stage | – | முற்றிய பருவம் |
| Milky stage | – | பால் பிடிக்கும் பருவம் |
| Millet crops | – | தவசப் பயிர்கள் |
| Normal seedling | – | இயல்பு முற்றிய நாற்று |
| Oilseeds crops | – | எண்ணெய் வித்துப் பயிர்கள் |
| Plant pathology | – | பயிர் நோயியல் |

**சொற்குவை (sorkuvai.com) வலைத்தளத்தில் தமிழுக்கு நிகரான ஆங்கிலச் சொற்களையும், ஆங்கிலத்திற்கு நிகரான தமிழ்ச்சொற்களையும் பார்த்துப் பயன்கொள்ளலாம்.**

# சொல்வயல்


செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் வெளியீடு
திருவள்ளுவர் ஆண்டு 2055, நளி (கார்த்திகை)
**நவம்பர் – 2024**



ஆசிரியர் : திருமதி **க. பவானி**
இயக்குநர் (மு.கூ.பொ.)

பொறுப்பாசிரியர் : முனைவர் **வே. கார்த்திக்**

இதழ்க்குழு : திரு. கி. இராமர்
திரு. ஏ. காந்தி
திருமதி. க. கத்தூரி

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்
முதல் தளம், நகராட்சி நிருவாக அலுவலகக் கட்டடம்,
எண்.75, சாந்தோம் நெடுஞ்சாலை, எம்.ஆர்.சி. நகர்,
சென்னை – 600 028.
மின்னஞ்சல் : solvayal@gmail.com
வலைத்தளம் : www.sorkuvai.com

Directorate of Tamil Etymological Dictionary Project,
First floor, Urban Administrative office Campus,
No:75,Santhome high Road,
MRC Nagar, Chennai–28
Mail id : solvayal@gmail.com
Website : www.sorkuvai.com



ஐ.எஸ்.பி.என் (ISBN):978-81-958032-0-0

செம்மாந்த மனித வாழ்வுக்குத் தேவையான உயர் அறநெறிகளை உலகோர் அனைவருக்கும் பொதுப்பட வகுத்தளித்த உலகப்பொதுமறையாம் திருக்குறளைத் தந்த தமிழ்மொழி அளவிலா அருஞ்சிறப்புகளைத் தன்னகத்தே கொண்டது. இதனை அறியாத சிலர் "தமிழ் எந்தவகையில் சிறந்தது?" என்று அறியாது கேட்கின்றனர்.

பத்துப்பாட்டு, எட்டுத்தொகை உள்ளடங்கிய சங்க இலக்கியம் தொடங்கி இக்கால இலக்கியம் வரையிலான எண்ணற்ற இலக்கிய – இலக்கணப் படைப்புகள் தமிழின் சிறப்புகளைப் பறைசாற்றிவருகின்றன. அந்தவகையில் செம்மொழியாம் தமிழ்மொழியின் அறநெறி அறிவுறுத்தலை விளக்கும் வண்ணம், கட்செவியில் தமிழன்பர் ஒருவர் எழுதிய செய்தியை இங்கே பதிவுசெய்கிறேன்

பதினெண் கீழ்க்கணக்கு நூல்களுள் ஒன்று முதுமொழிக்காஞ்சி. இந்நூலை இயற்றியவர் மதுரைக் கூடலூர் கிழார். நூறு பாடல்களைக் கொண்டது இந்நூல். முதுமொழி என்பது பழமொழி என்னும் சொற்பொருளோடு தொடர்புடையது. மூதுரை, முதுசொல் என்பனவும் இப்பொருள் தருவன. முதுமொழிக்காஞ்சி என்பது காஞ்சித் திணையின் துறைகளுள் ஒன்று. உலகியல் உண்மைகளைத் தெளிவாகக் கூறுவது முதுமொழிக்காஞ்சி. அதுவே இந்நூலுக்குப் பெயராயிற்று.

சிறந்தனவாகிய பத்துப் பொருள்களை இப்பகுதி கூறுவதால் 'சிறந்த பத்து' என்னும் பெயரினைப் பெற்றுள்ளது. இதன்கண் உள்ள பத்து அடிகளிலும் சிறந்தன்று என்ற ஒரு சொல் பயின்று வந்துள்ளது. அதற்குச் 'சிறந்தது' என்பது பொருள். பத்து அடிகளில் ஒவ்வொரு அடியிலும் ஒவ்வொரு சிறந்த பொருளைக் கூறி அதைவிட சிறந்த இன்னொரு பொருளைக் கூறி விளக்குவது இதன் சிறப்பு.

1. ஆர்கலி உலகத்து மக்கட் கெல்லாம்
   ஓதலின் சிறந்தன்று ஒழுக்கம் உடைமை.

கடல் சூழ்ந்த இவ்வுலகத்தில் உள்ள மக்களுக்கு எல்லாம் கல்வியைக் காட்டிலும், நல்லொழுக்கம் உடைமை சிறந்ததாகும்.

2.காதலின் சிறந்தன்று கண்ணஞ்சப் படுதல்

ஒருவரிடம் அன்பைக் காட்டுவதை விடவும், தமது உயரிய பண்பைக் கண்டு மதிக்கும் முறையில் உயர்ந்த செயல்களால் அவர் போற்றும்படி நாம் நடந்து கொள்வது சிறந்ததாகும்.

3.மேதையின் சிறந்தன்று கற்றது மறவாமை.

கல்வியில் பெரிய மேதையாய் வல்லமை பெற்று இருப்பதைக் காட்டிலும், கற்றதை மறவாமல் இருந்து அதன்படி ஒழுகுதல் சிறந்ததாகும்.

4.வண்மையின் சிறந்தன்று வாய்மை உடைமை.

வளமான செல்வம் உடைமையைவிட, உண்மையான வாழ்வு உடைமை சிறந்ததாகும். அதாவது, கொடையைக் காட்டிலும் பொய் சொல்லாத வாய்மை சிறந்தது.

5.இளமையின் சிறந்தன்று மெய்பிணி இன்மை.

ஒருவனுக்கு இளமை இன்பத்தைவிட, நோயில்லாத வாழ்க்கையினால் உண்டாகிற இன்பமே மிகச் சிறந்த இன்பமாகும்.

**6.நலன் உடைமையின் நாணுச் சிறந்தன்று.**
ஒருவர் உடல் அழகு உடையவராக இருப்பதைக் காட்டிலும், பழி பாவங்களுக்கு அஞ்சும் நாணம் உடையவராக இருப்பது சிறந்ததாகும்.

**7.குலன் உடைமையின் கற்புச் சிறந்தன்று.**
குலன் என்பது குடிப்பிறப்பைக் குறிக்கும். கற்பு என்பது கல்வியைக் குறிக்கும். ஒருவன் உயர்குடியில் பிறந்தவராக இருத்தலைவிட, கல்வி உடையவராக இருப்பதே மிகவும் சிறந்ததாகும்.

**8.கற்றலின் கற்றாரை வழிபடுதல் சிறந்தன்று.**
ஒருவர் கல்வி கற்பது சிறந்தது. கற்றவர்களைப் போற்றி வழிபடுவது அதைவிட சிறந்ததாகும்.

**9.செற்றாரைச் செறுத்தலின் தன்செய்கை சிறந்தன்று.**
பகைவரை (செற்றார்) அழித்தலைவிட, அவர்களைக் காட்டிலும் நம் நிலையை உயர்த்திக் கொள்ளுதல் சிறந்ததாகும்.

**10.முன் பெருகலின் பின் சிறுகாமை சிறந்தன்று.**
இளமையில் செல்வச் செழிப்போடு வாழ்ந்து பின் வளம் குன்றிப் போவதைவிட, இயல்பாக வாழ்ந்து முதுமையிலும் தன் நிலைமை குறையாமல் நிறையுடன் வாழ்தல் சிறந்ததாகும்.

இந்தச் 'சிறந்த பத்தைப்' போலச் சிறந்த முத்துக்கள் தமிழில் எத்துணையோ உள்ளன. அத்துணையும் கற்றால் அவை நம் அகத்துணையாய் வந்து நன்னெறிப்படுத்தும்.

**தமிழைச் சொல்வோம்! தமிழால் வெல்வோம்!**

## மயங்கொலிச் சொற்கள்

**தாலம்**

1. தாம்பளம் 2. உலகம் 3. உள்ளங்கை
4. நா. "தாலம் பதினாலும்" (அரிச்.4, நாட். 9)

**தாழம்**

1. ஓசை முதலியவற்றின் தாழ்வு 2. அமைதி
3. காலத்தாழ்வு

**தாளம்**

1. பனை (பாட்டுத்தாளம்) 2. கைத்தாளக் கருவி
" அடிகளார் தங்கையிற் றாள மிகுந்தவாறு" (திருவாச.17.8)

# தமிழ் அகராதியியலின் தந்தை வீரமாமுனிவர் பிறந்தநாள் விழா



தமிழுக்குத் தொண்டாற்றிய இத்தாலியப் பேரறிஞர் வீரமாமுனிவர் அவர்களின் பிறந்த நாளை முன்னிட்டு, 08.11.2024ஆம் நாள் தமிழ்நாடு அரசின் சார்பில், மாண்புமிகு தமிழ் வளர்ச்சி மற்றும் செய்தித்துறை அமைச்சர் திரு. மு.பெ. சாமிநாதன் அவர்கள், மாண்புமிகு மருத்துவம் மற்றும் மக்கள் நல்வாழ்வுத்துறை அமைச்சர் திரு. மா. சுப்பிரமணியன் அவர்கள், மாண்புமிகு இந்துசமயம் மற்றும் அறநிலையத் துறை அமைச்சர் திரு. பி.கே. சேகர்பாபு அவர்கள் ஆகியோர் சென்னை, மெரினா கடற்கரை, காமராசர் சாலையில் உள்ள வீரமாமுனிவரின் திருவுருவச்சிலைக்கு மாலை அணிவித்து மலர் தூவி மரியாதை செலுத்தினார்கள். நிகழ்வின்போது, மாண்பமை சென்னை மாநகராட்சி மன்றத் தலைவர் திருமதி பிரியா இராஜன், மாண்பமை துணைத் தலைவர் திரு. மகேஷ்குமார் உள்ளிட்டோரும் கலந்துகொண்டு மலர்தூவி மரியாதை செலுத்தினார்கள்.





'தமிழ் அகராதியியலின் தந்தை' என்று போற்றப்படும் வீரமாமுனிவரின் பிறந்த நாளை முன்னிட்டு 08.11.2024ஆம் நாள், செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தில் அவரின் திருவுருவப் படத்திற்கு இயக்குநர் (மு.கூ.பொ.) திருமதி க. பவானி அவர்கள் மலர்தூவி புகழ்வணக்கம் செலுத்தினார்கள். இயக்கக அலுவலர்கள் மற்றும் பணியாளர்கள் உள்ளிட்டோரும் கலந்துகொண்டு வீரமாமுனிவரின் தமிழ்த்தொண்டைப் போற்றி வணக்கம் செலுத்தினார்கள்.

# பன்முகப் பார்வையர் பாவாணர்



**முனைவர் இரா.கு.ஆல்துரை**
தமிழ்நாட்டரசின் சிறந்த மொழிபெயர்ப்பாளர்
விருதுபெற்றவர்

## இருபெரும் பண்புகளின் உறைவிடம்

ஆய்வு நோக்கு, கொள்கைப்பிடிப்பு ஆகிய இருபெரும் பண்புகளின் உறைவிடமாகத் திகழ்ந்தவர் பாவாணர். ஆய்வு நோக்கு இளம் அகவை முதல் உயிர் பிரியும் இறுதிக்காலம் வரை தொடர்ந்து காணப்பட்ட ஒன்று. ஆய்வறிஞருக்கு இது ஓர் எடுத்துக்காட்டு. வகுத்தும் தொகுத்தும் விளக்கும் தன்மை இவருக்கே உரியது எனக் கொள்ளும் வகையில் இவரது ஆய்வுகள் துலங்குகின்றன.

பட்டம், பதவி போன்ற குறுகிய நோக்கங்களுக்காகக் கொள்ளும் ஆய்வு குறிப்பிட்ட காலக்கட்டத்தில் முடிவு பெறுவதுண்டு. ஆயின் உண்மை ஆய்வறிஞரின் ஆய்வு இடைவிடாதும் நெட்டிடையிட்டதும் தம் இறுதிக்காலம் வரை மேற்கொள்ளப்படுவதுமாகவும் இருக்கும். ஐம்பது ஆண்டுக்காலம் இடையீடுபடாமல் தொடர்ந்த ஆய்வு, அதிலும் குறிப்பிடத்தக்கது ஒரே பொருள் பற்றிய ஆய்வு; தமிழாய்வு! இதுவன்றோ பாவாணரைத் தமிழ் வேழமாக்கியது.

"ஓர் உண்மையான ஆராய்ச்சியாளன் ஒரு நாளும் ஆராயாதிருக்க முடியாது. அவன் ஆராயாவிடினும் அவன் உள்ளம் ஆராயும். அதற்குக் கனவென்றும் நனவென்றும் ஊண்வேளையென்றும் உறக்கவேளையென்றுமில்லை" (1988:54) என்று ஓர் ஆராய்ச்சியாளனின் தன்மையை வரையறுத்துக் காட்டினார் பாவாணர். அவரே இவ் வரையறைக்கு உரியவராகவும் திகழ்ந்தார்.

"கல்விவேறு; ஆராய்ச்சி வேறு" (1973: முக.11.) என வகைப்படுத்தி, நிறை கல்வியுடன் ஆராய்ச்சி மேற்கொண்டவர் பாவாணர். பாவாணரின் ஆய்வுகள் தனிப் பண்புடையன; மூலத்தன்மை பொருந்தியன; ஆய்வாளர்களை உருவாக்கும் திறமுடையன; ஆர்வத்தைத் தூண்டுவன. சொல்லாய்வு என்னும் புதுவகை ஆய்வினைத் தமிழுக்கு அறிமுகப்படுத்திய பெருமை இவருக்குண்டு.

தனித்தமிழ்க் கொள்கை, தன்மானவுணர்வு, வறுமையிலும் செம்மாப்பு, எதிர்ப்பிலும் மனம் குலையாத உறுதி, ஊக்கம் கிடைக்காத போதும் உறுதி குன்றா மனநிலை போன்றவற்றில் தம் கொள்கைப் பிடிப்பினைக் காட்டியவர் பாவாணர். அதனாலன்றோ இவர் கொள்கைக்குன்றம் என்று போற்றப்பட்டார்.

கொள்கை குன்றிக் குலைந்துபோன குமுகாயத்தைத் தட்டி எழுப்பினார்; தமிழ்க் குமுகாயத்தின் தனிச்சிறப்பை எடுத்துக்காட்டினார்; மறைப்புண்டு கிடந்த தமிழின் ஏற்றத்தை வெளிச்சமிட்டுக் காட்டினார்.

கொள்கை சிலவிடங்களில் பற்றின் காரணமாக அமைவதுண்டு. அவ் வாறாயின் ஒருபக்கம் சாயும் குற்றத்திற்கு ஆளாவதும் உண்டு. ஆய்பவனும் நானே! ஆய்ந்து கண்ட முடிபினை நடைமுறைப் படுத்துபவனும் நானே! என்று வீறுகொண்டு நின்றவர் பாவாணர்.

"இயற்கை, மென்மை, ஒழுங்கு, வளம் என்னும் திறங்களை ஒருங்கே கொண்டது தமிழ்" (1967: முன்.12) எனக் காட்டினார். தம் ஆய்வு தமிழின் தொன்மையைச் செந்தமிழாகக் காட்டியது. தமிழைச் செந்தமிழாகவே நிலைநிறுத்தத் தாமே நடைமுறைப் படுத்தினார்; தூய தமிழிலேயே பேச வேண்டும் என்று சூளிட்டுக் கொண்டார்; வாழ்நாள் இறுதிவரை கடைப்பிடித்தும் காட்டினார்.

## சொல்லாய்வுக் கிலக்கணம் வகுத்தவர்

"மொழியாராய்ச்சியும், நடுநிலை, அஞ்சாமை, தன்னலமின்மை, மொழியறி யவா என்னும் நாற்பண்பும் உடையவரால் தான் வேர்ச் சொற்களைத் தொகுக்க இயலும்" (1973: முக. 11) என்று சொல்லாய்வாளருக்கு இலக்கணம் வகுத்தவர் பாவாணர். அவ் விலக்கணத்திற்கு இலக்கியமாகத் திகழ்ந்தவரும் பாவாணர்.

வாழ்நாள் முழுவதும் வேர்ச்சொல்லாராய்ச்சியில் மூழ்கிக் கிடந்தவர் பாவாணர். வேர்ச்சொல் காண்பதற்கு எளிதாகவும் மிகுதியாகவும் இடந்தரும் மொழி தமிழ் என்றும், இங்ஙனம் கூறும் நிலை வேறு எம்மொழிக்கும் இல்லை என்றும் உறுதிப்படுத்தித் தந்தவர் பாவாணர்.

பிளேட்டோ (கி.மு. 427–345) சொற்களின் தோற்றத்தைப் பற்றிக் குறிப்பிடும் பொழுது, குறிப்பாகப் பொருளுக்கும் அதைக் குறிக்கும் சொல்லுக்கும் இடையே இயல்பாக, தேவையான அடிப்படையில் தொடர்பு உள்ளதா? இல்லை மரபால் ஏற்பட்டதா? என்பதைப்பற்றிச் சொல்லாடுவார். இச் சொல்லாடல் நூறு ஆண்டுகளுக்குமேல் அறிஞர் பெருமக்களுக்கிடையே நடந்து வந்தது.

ஒப்புமை காண்பவர்கள் மொழி இயல்பானது என்றும், அடிப்படையில் ஒழுங்கானது என்றும், ஏரணமுறையில் அமைந்தது என்றும் நம்புகின்றனர். இதை மறுப்பவர் மொழியில் நிலவும் ஒழுங்கற்ற இடங்களை எடுத்துக் காட்டுவர்" (புளூம்பீல்டு 1996:4).

பாவாணரது ஆய்வு தமிழ்மொழி இயல்பாகவும் சீராகவும் ஏரண அடிப்படையிலும் வளர்ந்து வந்துள்ள நிலையைக் காட்டிற்று. "தமிழ் இயன்மொழி யாதலால், பெரும்பாற் சொற்களின் வேர்வடிவை அல்லது வேருறுப்பை இன்றுந் தாங்கி நிற்கின்றது" (1973: முக.9) என்று தமிழின் அடிநாதத்தை இனங்காட்டிய பெருமைக்குரியவர் பாவாணர்.

பொருள், கருத்து, சொல் ஆகிய மூன்றிற்குமிடையே காணும் தொடர்பு தற்செயலானது அன்று; காரணத்துடன் அமைந்தது என்பதே பாவாணரின் சொல்லாய்வு உணர்த்தும் அடிப்படைப் பொருள். "எல்லாச் சொல்லும் பொருள்குறித் தனவே" எனச் சொன்ன தொல்காப்பியர் கருத்தை மெய்ப்பிக்கவே பாவாணரின் சொல்லாய்வு எழுந்தது.

"கருத்து, சொல் ஆகியவற்றைத் தனித்தனியாகப் பிரிப்பது இயலாத ஒன்று. இவை இரண்டனுள் ஒன்றன் துணைகொண்டே மற்றது நிலைகொள்கிறது. கிரேக்க மொழியில் லோகோசு (logos) (இலத்தீனில் oratio) என்னும் சொல் பேசும் ஆற்றல், கருத்து ஆகிய இரண்டையும் குறிப்பதை, இதை விளக்கு வதற்கு எடுத்துக்காட்டுவர்.

மாந்த மனத்திலிருந்து வெளிப்படும் கருத்தில் முதல் புறவடிவமாகச் சொல் விளங்குகிறது. சொல்லே கருத்தின் நிலையானப் பேணிடமாகவும் விளங்குகிறது" (மாக்கசு முல்லர் 1987: முன்.x). இக்காலமொழி சொல்வளம் மிக்கதாக இருந்தாலும் அவற்றை விளக்க மிகச் சிறிய அளவு வேர்ச்சொற்கள் போதுமானவை.

இன்றுள்ள சொற்கள் அனைத்தும் குறைந்த அளவிலான வேர்களினின்று வளர்ந்தன என்று காட்டுவதன் மூலம் சொற்கள் காலந்தோறும் வளர்ந்து வந்துள்ள நிலையை அறியலாம். சொல்வளங்கள் அனைத்தையும் உருவாக்கும் ஊற்றுகளாக வேர்கள் விளங்குகின்றன. தமிழ் பேசுவோர் மனத்திடைத் தோன்றும் எண்ணம் நேரிடையாகவோ மறைமுகமாகவோ இவ் வடிப்படை வேர்க்கருத்துகளுடன் தொடர்பு கொண்டிருக்கும் என்பது திண்ணம்.

"வேர்ச்சொற்கள் :1. ஆணிவேர்ச்சொற்கள் (Primary Roots), 2. பக்கவேர்ச் சொற்கள் (Secondary Roots), 3. சல்லிவேர்ச்சொற்கள் (Tertiary Roots) என மூவகைப்படும். வேர்ச்சொற்களுக்கு மூலமான விதைச்சொற்கள் என்பன உண்டு" (1944:முன்.10) என்பார் பாவாணர். இப்படி வேருக்கும் முந்தைய நிலையைத் தமிழ்போன்ற இயன்மொழியிலேயே தெளிவாகக் காண இயலும் என்று விளக்கினார் அவர்.

மொழி காலந்தோறும் மாறும் இயல்புடையது. பழைய இலக்கியங்களில் உள்ள மொழியின் மாற்றத்தை அதன் இலக்கியங்களுடன் ஒப்பிட்டுத் தெரிந்து கொள்ளலாம். காலந்தோறும் புதியதாக வரும் பொருளையும் கருத்தையும் குறிக்கப் புதுச்சொற்கள் பிறக்கின்றன. இப் புதுச்சொற்களும் அம் மொழியிலிருந்து வந்த பழைய சொற்களிலிருந்தே உருவாக்கப் படுகின்றன. இதற்கு 'ஒரு கருத்தினின்று மற்றொரு கருத்துத் தோன்றும் போது, ஒரு சொல்லினின்று மற்றொரு சொல் பிறக்க இடமுண்டாகின்றது. கருத்து வேறுபடும்போது சொல்லும் வேறுபடல் வேண்டும். அன்றேல் பொருள் மயக்கம் உண்டாவதோடு மொழியும் வளர்ச்சியுறாது. இதுவே சொல்லாக்க அடிப்படை நெறிமுறை" (1973:முக.9) என்று மொழியின் சொல் வளர்ச்சிக்கு நெறிமுறை வகுத்துக் காட்டியவர் பாவாணர். சொல்லாய்வையே வாழ்வாகக் கொண்டவர் பாவாணர்.

"மக்களைப் போன்றே சொற்களும் குடும்பங் குடும்பமாகவும் கூட்டங் கூட்டமாகவும் இயங்குகின்றன. குடும்பத்தினின்று குடும்பும், குடும்பினின்று குடியும், குடியினின்று குலமும், குலத்தினின்று இனமும், இனத்தினின்று வரணமும், மக்கள் மரபில் கிளைத்துப் பெருகுவது போலச் சொன்மரபிலும் கிளைத்துப் பெருகுகின்றன" (1992:108) என்று சொன்மரபிற்குப் புதுவகை வரையறையிட்டு விளக்கியவர் பாவாணர்.

## மொழியின் கருநிலையைக் காட்டியவர்

மொழியியல் அறிஞர்களுள் சிலர் மொழி ஒருமுறைதான் தோன்றியது; இன்றைய பல்வேறு மொழிகள் அந்த மூலமொழியிலிருந்து பரவுதலினால் உருவாகின என்னும் கருத்துடையவர்கள். மொழி பல்வேறு காலக் கட்டங்களில் பல்வேறு இடங்களில் தோன்றின என்னும் கருத்துடையோரும் உள்ளனர்.

பாவாணர் மொழி ஓரிடத்தில் தோன்றியது என்னும் கருத்துடையவர். மொழி தோன்றிய இடம் மாந்தன் தோன்றிய இடமான குமரிக்கண்டமே என்பது அவரது ஆய்வுத் துணிபு. இம் மூலமொழியிலிருந்தே உலகமொழிகள் அனைத்தும் உருவாயின என்பதும் அவரது ஆய்வு முடிபாகும்.

"அறிஞர்கள் மாந்தக் குலத்தின் பழங்கால வரலாற்றில் மொழி உருவாகியது என்றும் ஒரு மில்லியன் அல்லது இரண்டு மில்லியன் ஆண்டுகளுக்கு முன் அது உருவாகியுள்ளது என்றும் கணக்கிடுகின்றனர். நீண்ட காலத்திற்கு முந்தைய நிலையை அறிவியல் நோக்கோடு ஆராய வாய்ப்பில்லை அல்லது முடியாது எனக் கொள்ளத் தேவையில்லை என்றும் குறிப்பிடுவர்" (மோரிசு சுவடேசு 1972:2).

மொழியியலாளர்கள் ஒப்பிட்டும் மீட்டுருவாக்கம் செய்தும் மொழியின் பழங்காலத் தன்மையைக் கணக்கிடுவர். அவர்கள் மீட்டுருவாக்கம் செய்ததை ஒப்பிட்டுப் பார்க்கப் பதிந்து வைக்கப்பட்ட சான்று எதுவும் நமக்குக் கிடைப்பதில்லை. பாவாணர் பழந்தமிழ் வழக்குகள் பலவற்றை மீட்டுருவாக்கம் செய்து காட்டுவார்; அவற்றை ஒப்புநோக்கப் பல சான்று களைக் காட்டுவார்; குடியேற்றப் பாதுகாப்பு என்று இனமொழிகளில் நிலைபெற்றுள்ள சொற்களைக் காட்டியும் தெளிவுபடுத்துவார்.

பலர் மொழித்தோற்றம் கடந்தகாலத்தில் நிகழ்ந்தது என்று குறித்துவிட்டு, அதன் வளர்ச்சியை விளக்காது சென்றுவிடுகின்றனர். ஆனால், பாவாணர் மொழிக் கருநிலையைக் காட்டி, அதனின்று வளர்ந்து வந்த நிலைகளைத் தெளிவுபடுத்தினார்.

### மொழிவளர்ச்சி

"மொழியியலறிஞர் ஆட்டோ எசுபெர்சன் (1860–1943) ஆய்வு முடிபு மொழி பொதுத்தன்மையிலிருந்து எளிமைப்பட்டு வந்துள்ளது என்கிறது. இது இக்கால முடிபுக்கு எதிராக உள்ளது. இக்கால ஆய்வாளர்கள் ஆய்வுகள் மொழி எளிய ஓரசைச் சொற்களுடன் உருவாகிப் பின்னர் சிக்கலான தன்மைக்கு வளர்ந்து வந்துள்ளது என்கின்றனர். எசுபெர்சன் மொழி காலவோட்டத்தில் எளிமைப்பட்டு வந்திருப்பதைக் குறிப்பிடுகிறார். சில நெறிவிலக்குகள் இருந்தாலும் மொழி எளிமைப்பட்டு வந்திருக்கிறது என்பது அவரது முடிபாகும். இதனை அவர் மொழிவளர்ச்சி என்றே குறிப்பிடுகிறார்" (மோரிசு சுவடேசு 1972:3).

பாவாணரது சுட்டடிக் கொள்கை மொழி எளிய சுட்டுகளிலிருந்து தோன்றியதை விளக்குகிறது. சுட்டடிகளே தமிழின் சொல்வளத்தைப் பெருக்கிய விதைகள். இவற்றினின்று பிறந்தவை அல், இல், உல் என்னும் முளைகள். இம் முளைகள் குல், சுல், துல், நுல், புல், முல் என்னும் ஆணிவேர்ச் சொற்களை உருவாக்கின. இவற்றினின்று மொழிக்குத் தேவையான பல்லாயிரக் கணக்கான சொற்கள் தோன்றின.

"பெரும்பாலும் ஒரு மொழியின் வேர்கள் அமைப்பில் ஒரே சீரான அமைப்பைக் கொண்டன" (புளூம்பீல்டு 1996:243).

"மொழியின் பழங்கால வரலாற்றில் ஆணிவேர்ச் சொற்கள் மிகவும் இன்றியமையாதன' (மாக்கசு முல்லர் 1965:273).

"திராவிட மொழிகள் வடமொழிக்கு முந்தையதும் மிகப் பழைமை யானதுமான பல கூறுகளைக் கொண்டுள்ளன. அவற்றுள் குறிப்பிடத்தக்கன அவற்றின் சுட்டுகள்" (கால்டுவெல் 1987: 422).

மிகப் பழமையானதாக விளங்கும் சுட்டடிகளினின்றே மொழிவளர்ச்சியை வகுத்துக்காட்டிய சிறப்பு எண்ணி எண்ணிப் பாராட்டத்தக்கது.

மொழி வரலாற்றில் முதலில் தோன்றியவை எளிய சொற்களே. அவை காலவோட்டத்தில் திரிபு, சேர்க்கை போன்றவற்றால் சிக்கலானவையாக உருவாகியிருக்கக் கூடும். இத் தன்மையிலிருந்து மீண்டும் எளிமைப்படுவது இயல்பு. எசுபெர்சனின் ஆய்வு மொழி தோன்றிய நிலையிலிருந்து கொள்ளப்படாததாலும் இடையிலிருந்து கொள்ளப்பட்டதாலும் மொழி சிக்கலிலிருந்து எளிமைப்பட்டு வந்திருக்கிறது என்கிறது. ஆயின் பாவாணர் ஆய்வு மொழி எளிய ஓரசையிலிருந்து பிறந்ததைக் காட்டுகிறது.

"உண்மையில் ஒவ்வொரு சொல்லும் தொட்டிலில் சில காலமும் குழந்தை

வளர்ப்பொலியாகச் சில காலமும் செலவழிக்க வேண்டும்.அக்காலக்கட்டத்தில்நுண்பொருளுக்கும் உயிர்ப் பொருளுக்கும் குறைந்த அளவே கருத்தோட்டம் இருக்கும்" (மாக்கசு முல்லர் 1987:17).

சொற்களின் இயல்பு எளிமையான தோற்றம் கொண்டது. இதனை நுணுகி ஆராய்ந்து வெளிப்படுத்தினார் மொழிஞாயிறு.

## வேர்மூலம்

பாவாணரது ஆய்வுநெறி, வழக்கிழந்த சொற்களை மீட்டுருவாக்கம் செய்வதற்கும், சுட்டடிகளிலிருந்து ஞாலமுதன்மொழி தோன்றி வளர்ந்திருப்பதைக் காட்டுவதற்கும், ஞாலமுதன்மொழி தமிழே என்று நிறுவுவதற்கும், அதன் தன்மையை உலக மொழிகளோடு ஒப்பிட்டு ஆராய்வதற்கும் முன்னுரிமை கொண்டு திகழ்கிறது. என்றாலும் இவைஅனைத்திற்கும்அடிமணையாகத் திகழ்வது சொல்லுக்கு வேர்மூலம் காண்பது.

"ஒரு சொல்லிற்கு வேர்மூலம் காண முயல்வதற்கு முன் அச் சொல்லின் பழைய வடிவத்தையும், பயன்பாட்டையும், காலந்தோறும் வளர்ந்து வந்துள்ள நிலையையும் கண்டறிய வேண்டும். அச் சொல் தன்சொல்லாக (native origin) இருந்தால் இனமொழிகளில் அதன் வரலாற்றைக் காணவேண்டும் (கீற்று 1892:9).

சொல்லாராய்ச்சி மூலம் தமிழ்ச்சொற்களுக்கு வேர்மூலம் காண்பதில் வெற்றி கண்டவர் பாவாணர். சொல்லின் பழைய வடிவத்தை இலக்கிய வழக்கிலிருந்து காட்டும் திறனில் தன்னேரில்லாதவர்; வழக்கிழந்த சொற்களை மீட்டுருவாக்கம் செய்வதில் வல்லவர்; இனமொழிகளிலிருந்து சொல் வளர்ச்சியைக் காட்டுவதைத் தவறாது கடைப்பிடித்தவர்; இருவகை வழக்கிலும் சொல் வழக்குப் பெற்ற தன்மையைக் காட்டிச் சொல் காலந்தோறும் வளர்ந்து வந்துள்ள நிலையைக் காட்டுவதில் ஈடிணை யற்றவர்.

பாவாணர் தமிழ்நாட்டின் பல இடங்களில் பணியாற்றினார். அதனால் அவருக்குத் தமிழ்நாட்டின் நாட்டுப்புற வழக்குகள், கிளைமொழி வழக்குகள், பழமொழிகள் என்று அனைத்தும் அத்துப்படியாய் இருந்தன. அவற்றை வேண்டுமிடங்களில்பயன்படுத்தும்பெற்றியராகவும் இருந்தார்.

"சொன்மூலம் காண்பது அறிவியல் முறையில் அமைய வேண்டும். அது உன்னிப்பின் அடிப்படையில் அமையக்கூடாது. காலந்தோறும் வளர்ந்து வந்துள்ள சொன்னிலை உண்மைநிலையைக் காட்ட உதவும் வழியாகக் கொள்ள வேண்டும்" (கீற்று 1892:6).

சொற்பிறப்பியல் வகைகளாகப் பத்தினைப் பட்டியல் இட்டுக் காட்டி அவற்றிற்கு எடுத்துக்காட்டுத் தந்து விளக்கும் அளவிற்குச் சொற்பிறப்பியல் தன்மைகளை முழுமையாகவும் நுட்பமாகவும் ஆய்ந்தவர் பாவாணர்; சொல் காலந்தோறும் மாறிவந்துள்ள நிலையைச் சொற்றிரிபின் தன்மைகொண்டு விளக்கும் நுண்ணறிவுடையவர் பாவாணர். சொல்லின் உண்மைப் பொருளை நுணுகி ஆய்ந்து சொன்மூலங் காண விழைவதையே அவரது சொல்லாய்வு தெளிவாகக் காட்டுகிறது.

"எல்லாச் சொல்லும் பொருள்குறித் தனவே" (தொல். சொல். 155).

"ஒவ்வொரு சொல்லும் தன் சொந்த வரலாற்றைக் கொண்டிருக்கும்" (எமனோ 1965:6). "மொழியிலுள்ள அனைத்தும் பொருள் உணர்த்துவனவாக இருக்கின்றன" (மாக்கசு முல்லர் 1861:43).

"மொழியிலுள்ளது மிகச் சிறியதாக, இன்றியமையாமை அற்றதாக இருந்தாலும் அது பொருளுடன் இருக்கும்போது இன்றியமையாததாகிறது" (புளும்பீல்டு 1935:27).

சொல்லுக்கும் பொருளுக்கும் இயைந்த தொடர்பை ஆய்ந்து காட்டினார் பாவாணர். அதுவும் இயன்மொழியாகிய தமிழிலேயே இவ் வியைபைச் செம்மையாகக் காட்ட இயலும் என்றும் விளக்கினார்.

"மொழி கருத்துகளின் வைப்பிடமாக இருப்பதால் அதை உன்னதமான நிலம் என்று அழைக்கலாம்" (மாக்கசு முல்லர் 1965:3).

தமிழ்மொழியின் கருத்துப் பொதிந்த சொற்களின் நிலையை விளக்கிய பெருமை பாவாணரையே சாரும்.

## தமிழின் தூய்மை

பிறமொழிச் சொற்கள் கலப்பதால் தமிழின் இனிமை குறைகின்றது. நாளடைவில் தமிழில் கலக்கும் பிறமொழிச் சொற்கள் நிலைபெற்று அச் சொற்களுக்கு நேராக வழங்கி வந்த தமிழ்ச்சொற்கள் மறைந்து விடுகின்றன. தனித்தமிழில் பேசுதல் வேண்டும். அதற்கான முயற்சிகளை மேற்கொள்ள

வேண்டும்.

"தமிழ் திராவிட மொழிகளுள் பழங்காலந்தொட்டு வளமையுடன் வாழ்ந்து வரும் மொழி. தமிழ் தன்னிடத்துக் கொண்டுள்ள வடசொற்கள் அனைத்தையும் நீக்கி இயங்கும் திறம் கொண்டது; தமிழ் வடமொழித் துணையின்றித் தனித்து இயங்கவல்லது; தமிழ் வடமொழி உதவியின்றி வளமைபெற்று வளர்ச்சி காணத்தக்கது" (கால்டுவெல் 1987: 45).

"தமிழிற் கலந்துள்ள வடசொற்கள் எல்லாம் அதைக் கெடுத்தற்கென்றே ஆரியராற் புகுத்தப்பட்டவையே யன்றித் தமிழறிஞர் அவற்றின் தேவை யுணர்ந்து விரும்பிக் கடன் கொண்டவை அல்ல" (1969:732) என்று வடசொற்கள் தமிழில் நுழைந்த வகையை விளக்கியவர் பாவாணர்.

தமிழ்ச்சொற்கள் பலவற்றை அயற்சொற்கள் என மயங்கிக் கிடந்த நிலை இருந்தது. அவற்றில் பெரும்பான்மை தமிழ்ச்சொற்களாய் இருக்கும் தன்மையை விளக்கிய பெருமை இவருக்கு உண்டு. வடசொற்களுள் குறைந்த பக்கம் ஐந்திலிருபகுதி தமிழ்... நூற்றுக்கான வடசொற்கட்கு மூலம் அல்லது முதனிலை தமிழிலிருக்கிறது" (1967:294) என்று வடசொற்கள் எனக் கொள்ளப்பட்டு வந்த சொற்கள் பல தமிழாய் இருப்பதைக் காட்டினார் பாவாணர். வடசொல் பலவற்றிற்குத் தமிழில் மூலம் காட்டினார்.

பாவாணர் கலைச்சொல் படைப்பதில் சொன்மை மாறாமல் படைத்துத் தமிழ்மொழிக்கு அழகு சேர்த்தவர்; கலைச்சொல் படைப்பதற்கு வழிவகையும் காட்டிச் சென்றவர்.

எத்துறைப் பொருள்குறித்தும் விளக்கக் கூடிய சொல்வளம் மிக்க மொழி தமிழ் என்பதை வெளிச்சமிட்டுக் காட்டியவர்; பாவாணர் பிறமொழிச் சொற்களை நீக்கி அவற்றிற்கிணையான தமிழ்ச்சொற்களை உலகவழக்கு, இலக்கியவழக்கு ஆகியவற்றினின்று எடுத்தும் புதுச்சொல் புனைந்தும் தமிழுக்கு ஏற்றத்தைக் காட்டியவர்.

மொழித்தூய்மைக் கோட்பாடு தமிழ்மொழிக்கு மட்டுமே உரியதன்று. பிறமொழிச் சொற்களை நீக்கி மொழியைத் தூய்மைப்படுத்தும் முயற்சி பலவிடங்களில் நிகழ்ந்துள்ளது. மொழித்தூய்மை மொழியை வளப்படுத்து வதற்கு இன்றியமையாதது. மொழியின் தனித்தன்மை அழிந்துவிடும் என்னும் அச்சம், தங்கள் மொழிமீது கொண்டிருக்கும் பெருமித உணர்வு போன்ற காரணங்களினால் மொழித்தூய்மை முயற்சி கொள்ளப்பட்டுள்ளது.

ஆங்கில மொழியில் மொழித்தூய்மைக் கோட்பாடு கி.பி. 1913–ல் தொடங்கிய 'தூய ஆங்கிலக் கழகம்' என்னும் அமைப்பு தோன்றக் காரணமாயிற்று. பிரஞ்சு மொழியில் கி.பி. 1635–ல் ஏற்படுத்தப்பட்ட பிரஞ்சுக் கழகம் (Academic Francaise) மொழியைத் தூய்மைப்படுத்தும் நோக்கில் அமைக்கப்பட்டது.

கன்னடம், தெலுங்கு, மலையாளம் ஆகிய மொழிகளில் முறையே கி.பி. 9, 17, 18ஆம் நூற்றாண்டுகளில் மொழித்தூய்மை முயற்சிகள் மேற்கொள்ளப்பட்ட தற்கான சான்றுகள் கிடைக்கின்றன. தூய கன்னடம் திருள் கன்னடம் அல்லது அச்ச கன்னடம் என்றும், தூய தெலுங்கு அச்ச தெலுங்கு என்றும் தூய மலையாளம் பச்ச மலையாளம் என்றும் வழங்கப் பட்டன. இதேபோல் இந்தி, கூர்ச்சரம் பஞ்சாபி, வங்கம், திரிபுரி, அரபி, சிங்களம், கொரியா, வியத்நாமி, சீனம், செருமானியம், உருசியா, துருக்கி, பல்கேரியா, இத்தாலி போன்ற மொழிகளிலும் பல்வேறு காலக்கட்டங்களில் மொழியைத் தூய்மையாக்கும் முயற்சிகள் நடந்துள்ளன.

### புதுவகை

ஒரு குடும்பமொழிகளுக்கிடையே உள்ள உறவுகளை ஆராய்வது ஒப்பியன் மொழியியல். தமிழைத் தமிழின மொழிகளோடு ஒப்பிட்டு ஆராய்ந்து, தம் ஒப்பியன் மொழிநூல் திறமையைக் காட்டியவர் பாவாணர். இது அனைவரும் கடைப்பிடிக்கும் ஒரு நிலை. தமிழைப் பிறமொழிக் குடும்பங்களுடன் ஒப்பிட்டு ஆய்ந்த ஒப்பியன் மொழியியல் பாவாணர் கண்ட புதுநிலை.

தமிழ்ச்சொற்களுக்குத் திராவிடமொழிகளில் இனச்சொல் காட்டியது குடும்பமொழி களுக்கிடையே இனச்சொல் காட்டும் நிலை. தமிழ்ச் சொற்களுக்கு உலக மொழிகள் பலவற்றினின்று இனச்சொல் காட்டியது பாவாணர் காட்டிய புதுநிலை.

ஒப்பியன் மொழியியல் ஒரு மொழியின் பல்வேறு நிலைகளையறியத் துணைசெய்வதோடு அதனோடு தொடர்புடைய மொழிகளின் இயல்பினை யறியவுந் துணை செய்கின்றது. பாவாணர் உலகமொழிகள் பலவற்றினின்று சான்று காட்டி நிறுவும் திறமையுடையவர்; இதனைக் கொண்டு மொழிகளுக் கிடையே நிலவும் தொடர்பினை

வகைப்படுத்தித் தெரிவியல் (theory) உருவாக்கும் வல்லமை படைத்தவர்.

உலகமொழிகளை இயன்மொழி (primitive language) என்றும், திரிமொழிகள் (derivative languages) என்றும் வகைப்படுத்தியவர். திரிமொழிகளிலிருந்து திரிந்த திரிபில் திரிமொழிகளை அடையாளம் காட்டியவர்.

## செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலி

தமிழை ஞால முதன்மொழி என நிறுவுவது பாவாணர் ஆய்வுப் பணியின் நடுவ நோக்கம். இக் கொள்கையைத் தமிழின் வளமை, தொன்மை, ஆற்றல், முதலியவற்றைக் கொண்டு நிலைநாட்டினார். தமிழின் வளமையை நிலைபெறச் செய்ய வேண்டும் என்னும் அளவிலேயே தனித்தமிழ் பேணுதல் என்னும் கருத்துடையவரானார்.

அகரமுதலி பொதுவாகச் சொற்பொருள் உணர்த்தும் பாங்கில் அமைக்கப் படுகிறது. சொற்பிறப்புத் தன்மையிலான சிறப்புவகை அகரமுதலி சொல்லின் வேர்மூலம் காட்டுவதோடு நிற்கும். ஆனால் பாவாணருக்குச் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலி அவரது ஆய்வுகள் அனைத்திற்கும் உறைவிடமாக விளங்கியது; தமிழ்ச்சொற்களைப் பிறமொழிச் சொற்களி னின்று பிரித்துக்காட்டும் களமாகவும் விளங்கியது.

தமிழ் தென்னாட்டுப் பழங்குடி மொழி, குமரிநாட்டுமொழி, தமிழ் திராவிடத் தாய்மொழி, ஆரியத்திற்கு முந்தியமொழி, ஆரியத்திற்கு மூலமொழி, சொல்வளமிக்க தற்சார்புமொழி, உலக முதன்மொழி, வேர்ப்பொருள் காட்டும் மொழி, உயர்தனிச்செம்மொழி, தூய மரபுமொழி, ஒப்புயர்வில்லாத் தனிமொழி என்னும் பொருள்களை அடிப்படைக் கொள்கைகளாகக் கொண்டு உருவாக்கப்படுவதே செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலி எனக் கருதினார் பாவாணர்.

இதிலும் பாவாணரின் தனித்தன்மை விளங்குகிறது. இதுவரை பிறர் எவரும் கடைப்பிடிக்காத ஒரு புதுவகையில் சிந்தித்தார். தமிழின் ஒட்டுமொத்த வளமைகள் அனைத்தையும் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலியில் இடம்பெறுமாறு செய்யவேண்டும் எனத் திட்டமிட்டார். சொற்பிறப்பியல் அகரமுதலிக்குக் கலைக்களஞ்சிய அமைப்பினைப் புகுத்தினார். இதற்குக் கலைக்களஞ்சியத்திற்கு இல்லாத ஒரு புதுப்பண்பு உண்டு. சொற்கள் அனைத்திலும் சிறியதும் பெரியதுமான விளக்கங்கள் இடம்பெறுவதால் எல்லா இடங்களிலும் சொற்பிறப்பு, விளக்கம் ஆகியன இடம்பெறச் செய்யலாம். கலைக்களஞ்சியச் செய்திகளையும் சொற்பிறப்பியல் அகரமுதலியில் இடம்பெற வழிகாட்டினார்.

"மொழியாராய்ச்சி, சொல்லாராய்ச்சி, இலக்கணத்தேர்ச்சி, சொற்றொகுப்பு ஆகிய நாற்றிறம் கொண்டவரால்தான் ஓர் அகரமுதலியைத் தொகுக்கவோ திருத்தவோ இயலும்" (1968: 67) என்றார் பாவாணர். இந் நாற்றிறங்களுடன் அகரமுதலிப் பணியில் ஈடுபட்டார். அகரமுதலியிலும் ஒரு புதுவகையை நிலைநாட்டினார்.

சொற்பிறப்பியல் சொல்லின் தோற்றம் அல்லது அதன் வரலாற்றைக் கண்டறிவதோடு அதன் மெய்யான தன்மையையும் விளக்குவது. பாவாணருக்குச் சொற்பிறப்பியல் சொற்களின் வரலாற்றைப் பற்றிய படிப்பாகவும் சொற்களின் மூலங்களைக் காண்பதற்கு உதவுவதாகவும் இருந்தது என்பது உண்மை. என்றாலும் அடிப்படையில் சொற்பிறப்பியல் மொழியின் இயல்பைக் காட்டுவதாக இருக்கிறது எனக் கொண்டார் பாவாணர்.

வரலாறு, மொழிவரலாறு, பண்பாடு, நாகரிகம், மொழிநூல், சொல்லாய்வு, கட்டுரை வரைவியல், தமிழ் மரபு போன்ற பல கோணங்களில் ஆய்வு மேற்கொண்டவர் பாவாணர். தம் ஆய்வின் மூலம் கண்டவை அனைத்தையும் பிறவற்றையும் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலியில் இடம்பெறச் செய்து முழுநிறைவான, தமிழின் ஒட்டுமொத்த நிலையைச் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலி வடிவில் காண முயன்றார் பாவாணர்.

## இசைத்தொண்டு

பாவாணர் இயற்றமிழ் தொண்டோடு இசைத்தமிழ் தொண்டும் புரிந்தார். இசைத்தமிழை முறையாக மன்னார்குடிக் கோபாலய்யரிடம் கற்றார்; கருவியிசை இசைக்கவும் பயின்றிருந்தார். இசைத்தொடர்பான ஆய்வுக் கட்டுரைகளும் எழுதியுள்ளார். பாவாணரின் ஐந்து இசைப்பா நூல்கள் வெளியாகியுள்ளன. அவையாவன: 1. சிறுவர் பாடல் திரட்டு, 2. கிறித்தவக் கீர்த்தனம், 3. செந்தமிழ்க் காஞ்சி, 4. இசைத் தமிழ்க்கலம்பகம். 5. இசையரங்கு இன்னிசைக் கோவை.

பாவாணர் தனிப்பாடல் தொகை 'பாவாணர் பாடல்கள்' என்னும் தலைப்பில் நூலாக வெளியிடப்பட்டுள்ளது.

திருவள்ளுவரைக் குறித்தும் கலைச்சொல் குறித்தும் பாவாணர் இசைப் பாடல்கள் இயற்றியுள்ளார்.

### பெயர்

பாவாணரது இயற்பெயர் தேவநேசன். அக்காலத்தில் நிலவிவந்த ஒரு நடைமுறையின்படி தமிழாசிரியராவதற்கு இவர் தமிழ் கற்பிக்கத் தகுதி யுடையவர் என்று ஒருவர் சான்று வழங்கினால் போதும். அவ் வடிப்படை யிலேயே தமிழாசிரியர் பணியில் சேரலாம். பண்டிதர் மாசிலாமணி என்பவர் பாவாணருக்குச் சான்றிதழ் வழங்கும்போது அவரது கவிபாடுந் திறமையைக் குறிப்பிடும் வகையில் தேவநேசக் கவிவாணன் என்று குறிப்பிட்டுள்ளார். பின்னர் அனைத்திலும் மொழித்தூய்மை வேண்டும் என்று கொண்ட விருப்பத்தினால் 'தேவநேசன்', தேவநேயமாகவும் 'கவிவாணன்' பாவாணனாகவும் மாற்றப்பட்டன. அதிலும் பாவாணர் என்னும் பின்னொட்டுச் சிறப்புப் பெயரே நிலைத்து நின்றது.

'பா' இயற்றும் திறமை யடிப்படையில் கிடைத்த சிறப்புப்பெயர் இன்று சொல்லாய்வு அறிஞர் என்னும் பொருளையே முதன்மையாகக் கொண்டு உலாவருகிறது. 'பா' த்திறம் வழிநிலைப் பொருளுக்குத் தள்ளப்பட்டது.

பாவாணர் கொள்கையைப் பரப்பும் வகையில் தனித்தமிழ் அன்பர்களும் பிறரும் தொடர்ந்து செயற்பட்டு வருகின்றனர். அறிஞர்கள் பாவாணர் படைப்புகளைத் திறனாய்வு செய்து வருகின்றனர். இவரது மொழியாய்வு பற்றிய ஆய்வுகள் அறிஞர்களுக்கு மட்டும் உதவுவன. என்றாலும் அவரது மொழிக்கொள்கை பாமரமக்களையும் உள்ளடக்க முயல்கிறது.

பாவாணர் வாழ்க்கை வரலாறு அவர் வாழ்ந்த காலக்கட்டத்தில் நாடு, மொழி, இனம், தழுவிய ஓர் இயக்க வரலாற்றைக் காட்டுகிறது. தாமே தம் வரலாற்றை வரைய எண்ணியிருந்தார். ஆனால் அது நிறைவேறவில்லை.

உண்மை, உழைப்பு, துணிபு, ஒழுக்கம் முதலான தனிமாந்தப் பண்புகளை யும் பாவாணர் படைப்புகள் தூண்டுவனவாக இருக்கின்றன.

பாவாணரின் பன்முகப் புலமையாழம் அளவிடற்கரியது. இவர் தமக்கெனத் தனித்த ஆராய்ச்சிப் போக்கை வகுத்துக் கொண்டு ஆராய்ந்தார். மேனாட்டு அறிஞர் அல்லது பிறர் கொள்கைகளைக் கண்ணை மூடிக்கொண்டு ஒப்புக்கொள்ள மாட்டார். தம் வாழ்நாள் முழுமையும் ஆராய்ச்சியில் தம்மை ஆழ்த்திக் கொண்டார். தமிழ் மொழி, வரலாறு, இனம், பண்பாடு தொடர்பான பலவற்றைத் தம் ஆய்வின் மூலம் தெளிவுபடுத்தினார். இவர் ஓர் வியக்கத் தக்க அறிஞர்.

### மேற்கோள் நூல்கள்


1. பாவாணர், 1964, திரவிடத்தாய், கழகம், சென்னை (முதற்பதிப்பு1944)
2. பாவாணர், 1992, சொல்லாராய்ச்சிக் கட்டுரைகள், கழகம், சென்னை (முதற்பதிப்பு 1949)
3. பாவாணர், 1967, வடமொழி வரலாறு, நேசமணி பதிப்பகம், காட்டுப்பாடி.
4. பாவாணர், 1968, வண்ணனை மொழிநூலின் வழுவியல், நேசமணி பதிப்பகம், காட்டுப்பாடி.
5. பாவாணர், 1969, திருக்குறள் தமிழ்மரபுரை, நேசமணி பதிப்பகம், காட்டுப்பாடி.
6. பாவாணர், 1973, வேர்ச்சொற் கட்டுரைகள், கழகம், சென்னை.
7. பாவாணர், 1988, என் அண்ணாமலை நகர் வாழ்க்கை, பாவாணர் பதிப்பகம், பெங்களூர்.
8. தொல்காப்பியம் சொல்லதிகாரம், 1980, கழகம், சென்னை.
9. Bloomfield, Leonard. 1996, Language Motilal Banarsidas, Delhi (First published 1935).
10. Caldwell, Robert, 1987, A Comparative Grammar of the Dravidian of South Indian Family of Languages, AES. New Delhi (First published1856).
11. Emeneau, M.B., 1965, India and Historical Grammar, Annamalai University.
12. MaxMuller, F.,1965, Lectures on the Science of Language. Munsiram Manoharlal, New Delhi (First published 1861).
13. MaxMuller, F., 1987, Biographies of Words and the Home of the Aryas, AES, New Delhi (First published 1888).
14. Morris Swadesh, 1972, The Origin and Diversification of Language, Routledge of Kegan paul, London.
15. Skeat, W., 1892, Principles of English Etymology, Oxford.

# கோள்களின் பெயர்க்காரணமும் பூவுலகும்

**இரா. திருமாவளவன்**
தேசியத் தலைவர்,
மலேசியத் தமிழ்நெறிக் கழகம், மலேசியா






பண்டைத் தமிழர் தம் நுண்மாண் நுழைபுல அறிவால் ஆழமாக ஆய்வு செய்து, தமிழ் மொழியின் சொற்களை அறிவியல் சொற்களாகவே அமைத்துள்ளனர். தமிழ்ச் சொற்கள் உணர்த்தும் மெய்ப்பொருளும், அறிவியல் உண்மைகளும் சிந்திக்கச் சிந்திக்க நம்மை வியப்பில் ஆழ்த்துகின்றன. புதிய அறிவியல் காலத்தில் மேலை நாட்டு அறிவியலாளர்களின் கண்டுபிடிப்புகள் கூறும் அறிவியல் கருத்துருக்கள் (concept) பலவற்றை முன்னரே பண்டைத்தமிழர் கண்டறிந்துள்ளனர்.

அதிர்வெடிக் கோட்பாடு (Big bang theory) எனப்படும் கோட்பாடு உணர்த்தும் ஓர் உண்மை, பேரண்டமானது விரிந்து கொண்டுள்ளது என்பதே. கண்ணுக்குப் புலப்படாத அணுக்களின் மோதலினால் பெருவெடி ஏற்பட்டு அதனின்றே பேரண்டம் உருவாகி விரிந்து கொண்டுள்ளது என்றனர்.

'பூ' எனும் அருந்தமிழ்ச் சொல் மலர்தல், விரிதல் எனும் பொருளை வழங்குவதாகும் இச்சொல், வாயிலிருந்து காற்றை வெளியாக்கும் போது எழும் ஓசை அடிப்படையில் உருவாகியது. வாயில் நன்றாகக் காற்றைப் புடைப்பாக அடக்கி வைத்துக் கொண்டு, பின்னர் மெல்ல ஊதுகின்ற பொழுது 'பூ' எனும் ஓசையே ஏற்படும். ஒரு பையில் வாயை வைத்துக் கொண்டு ஊதினால் அந்தப் பை காற்றேறிப் புடைக்கும். இதே போல்தான் பூதியில் (பலூனில்) வாயின் வாயிலாகக் காற்றை ஊதினால் அது புடைக்கும். பூ என்று ஊதுவதால் காற்று ஏறி அது புடைக்கின்றது. இதனால் பலூனுக்குத் தமிழில் 'பூதி' எனத் வேர்ச்சொல்லாய்வுப் பேரறிஞர் ப.அருளியார் சொல்லமைத்தார். ஆங்கிலத்தில் பலூன் balloon எனக் கூறப்படும் சொல்லுக்குப் பெல் bhel என வேர்ச்சொல் கூறுவர். இதற்கு மிகுதல், பெரிதாதல், வீங்குதல், உருட்சிப் பொருள், தொகுப்பு எனப் பொருள் கூறப்பட்டுள்ளது.

உல் = சேரல், சேரலால் மிகுதல், மிகுதலால் பெரிதாதல், வீங்குதல் என இவ்வேருக்குப் பொருள் அமையும். பூ என ஊதுதலாலும் சேரல் கருத்தாலும் பெருமைப் பொருள் அமைவது இயல்பு. ஊதுதலை வாய்வழி நிகழும் மூச்சுக் காற்றொலியால் ஆன சொல்லென்பார் பாவாணர். அதே வேலை உல் எனும் சேரல் கருத்து வழியும் மிகுதல் பொருள் நிகழும் என்பது பாவாணர் விளக்கமே.

அவ்வாறு அமைந்த சேரல் கருத்துடன் தொடர்புடையதே இந்தோ ஐரோப்பிய வேரான பெல் bhel என்பது. உல் > புல்> பல்> பல்கு,

பல்>பரு>பெரு, பல்>பெல்> bhel

bhel– (2)

Proto–Indo–European root meaning "to blow,

swell," "with derivatives referring to various round objects and to the notion of tumescent masculinity" [Watkins].

It forms all or part of: bale (n.) "large bundle or package of merchandise prepared for transportation;" baleen; ball (n.1) "round object, compact spherical body;" balloon; ballot; bawd; bold; bole; boll; bollocks; bollix; boulder; boulevard; bowl (n.) "round pot or cup;" bulk; bull (n.1) "bovine male animal;" bullock; bulwark; follicle; folly; fool; foosball; full (v.) "to tread or beat cloth to cleanse or thicken it;" ithyphallic; pall-mall; phallus.

It is the hypothetical source of/evidence for its existence is provided by: Greek phyllon "leaf," phallos"swollen penis;" Latin flos "flower," florere "to blossom, flourish," folium "leaf;" Old Prussian balsinis"cushion;" Old Norse belgr "bag, bellows;" Old English bolla "pot, cup, bowl;" Old Irish bolgaim "I swell," blath "blossom, flower," bolach "pimple," bolg "bag;" Breton bolc'h "flax pod;" Serbian buljiti"to stare, be bug-eyed;" Serbo-Croatian blazina "pillow."

An extended form of the root, *bhelgh- "to swell," forms all or part of: bellows; belly; bilge; billow; bolster; budget; bulge; Excalibur; Firbolgs.

An extended form of the root, *bhleu- "to swell, well up, overflow," forms all or part of: affluent; bloat; confluence; effluent; effluvium; efflux; fluctuate; fluent; fluid; flume; fluor; fluorescence; fluoride; fluoro-; flush (v.1) "spurt, rush out suddenly, flow with force;" fluvial; flux; influence; influenza; influx; mellifluous; phloem; reflux; superfluous.

என இந்தோ ஐரோப்பிய வேர்ச்சொல் அகரமுதலி விளக்கம் தருகின்றது.

காற்றால் ஊதுவது 'ஊதை' ; காற்றுக்கு' ஊதை' எனும் ஒரு சொல்லும் உண்டு. காற்றேறி பெரிதான உடம்பு, 'ஊதை உடம்பு' என்றும் 'ஊத்தை உடம்பு' என்றும் சொல்லப்படும். ஊதுவது 'ஊதி' என்றானது.'ஊதல்' பகர ஒற்று ஏற்று 'பூதல்' ஆனது. 'ஊது' எனும் சொல்லின் முன்னால் 'ப்' சேர்ந்தால் 'பூது' என்றாகும். பூது > பூதம்.

'பூதம்' என்றால் மிகப்பெரிய உருவம் என்றும் பொருளாகும். 'பூ' எனும் விரிதல் பொருளில் பூது > பூதம் முதலான சொற்கள் உருவாகின. அண்டவெளி யானது எல்லையற்று அகன்று விரிந்து, கிடப்பதால், விரிந்து கொண்டிருப்பதால் பூ> பூது> பூதம் என்றனர். எல்லையற்று புடைத்து விரிந்து கொண்டிருக்கின்ற அண்டவெளிப் பூதத்தின் கூறுகள் ஐந்தாகக் கிடப்பதைக் கண்டறிந்த தமிழ் அறிவியலாளர்கள் அவற்றை 'ஐம்பூதங்கள்' எனக் குறிப்பிட்டனர். நிலம், நீர், தீ, வளி, விசும்பு எனும் இயற்கையின் ஐந்து தனிமங்கள் ஐம்பூதங்கள் எனச் சொல்லப்பெற்றன. அண்ட வெளியின் விரிவுச் செயலைக் குறித்தே 'புடை' எனும் சொற் பொருளிலிருந்து 'புடைவி' என்றும் 'புடவி' என்றும் சொல் உருவாகியது. 'புடவி' என்றால் புடைத்து விரிந்து கொண்டிருக்கும் பேரண்டம் என்று பொருளாகும். இக் கருத்தையே அதிர்வெடிக் கோட்பாடு (Bigbang theory) விளக்குகின்றது.

பிற்கால அறிவியல் கண்டுபிடிப்பால் உணர்த்தப்பட்ட கொள்கையான இக்கண்டுபிடிப்பு அறியப்படாத பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்பதாகவே தமிழரிடம் தமிழ்ச்சொற்கள் வாயிலாகக் காணக் கிடைத்திருப்பது விந்தையிலும் விந்தைதானே. தமிழ்ச் சொற்கள் ஒவ்வொன்றும் இவ்வாறான அறிவியல் கோட்பாடுகளையும் மெய்மங்களையும் உணர்த்துகின்ற அரிய முதுசொம்மாகும்.

நிலம், நீர், தீ, வளி, விசும்பு எனும் ஐம்பூத தனிமங்களானவை பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்னால் தமிழரால் ஆய்ந்தறியப்பட்டு உணர்த்தப்பட்டவை யாகும்.

தொல்காப்பியத்தில்,

நிலம், தீ, நீர்,வளி, விசும்போடு ஐந்தும்
கலந்த மயக்கம் உலகம்

எனும் நூற்பா ஐம்பூதங்கள் கலந்த மயக்கமே இவ்வுலகம் என்கின்றது. இன்றைய அறிவியலில் பொருள்களின் நிலையை மூன்றாகப் பகுத்துச் சொல்கின்றனர். பள்ளிக் கூடங்களில் போதிக்கின்ற பொழுது, பொருள்களைத் திடப்பொருள், நீர்மப்பொருள், வளிமம் பொருள் என மூன்றாகப் பகுத்தே பயிற்றுவிப்பர். குளிர்ச்சி, வெப்பம் எனும் இயற்கையின் இருவகைத் தன்மைகளே பொருள்களின் நிலைமாற்றத்திற்குக் காரணமாகும். வெப்பமேறிய நீர் ஆவியாகிறது. ஆவியானது குளிரடைந்தால் மீண்டும் நீராகின்றது. இவ்விரு தன்மைகளே பொருள்களின் நிலை மாற்றத்திற்குக் கரணியமாக அமைகின்றன. இயற்கையின் தன்மை எங்கும் எதிலும் இருவகையாக அமைந்திருப் பதைக் கண்ட பண்டைத் தமிழர் 'இருமை (Dualism) ' கொள்கையை வகுத்தனர். அன்பு-அறிவு, ஆண்-பெண், தண்மை-

வெம்மை, இரவு-பகல் என இருமை தன்மைகளை நாம் பார்க்கக் காணலாம். இவ்விருமை தன்மையை உணர்த்தும் தமிழரின் அம்மை- அப்பன் கோட்பாடாகும்.

வள்ளுவப் பெருமான் திருக்குறளில் இதனை இருமை வகை என்கிறார். இவ்விருமை வகையின் கரணியமாகவே பொருள்களின் நிலைத்தன்மைகள் மாறுகின்றன. பொருள்களின் நிலைத் தன்மைகள் பொதுவாகப் பாடசாலைகளில் மூன்றாகப் பயிற்றுவிக்கப்பட்டாலும் நான்காவது ஒன்று உண்டு என்றும் அறிவியலில் சொல்லப்படுகின்றது. இதனைப் பொருளின் நான்காம் நிலை என்கின்றனர். இதற்கு 'பிளாசுமா' ((Plasma)) என்று பெயர். தமிழில் இதனைத் தீய்மம் எனலாம்.

தமிழர் கண்டறிந்த ஐம்பூதக் கொள்கைக்கும் பிற்கால அறிவியல் வகைப்படுத்தும் பொருள்களின் நிலைத்தன்மைக்கும் நெருங்கிய தொடர் புண்டு. தமிழர் நிலம், நீர், தீ, வளி, விசும்பு வெளி, காயம், விண், விசும்பு, ஏரகம் முதலான சொற்களிலேயே குறிப்பிடுகின்றனர். இவையனைத்தும் விரிந்து, பரந்து, இருண்டு கிடக்கும் அண்டம் எனும் பொருளையே உணர்த்தும். ஏர் எனும் விரிந்த வெளிப் பொருளை உணர்த்தும் சொல்லை பரந்து இயங்கிக் கொண்டிருக்கின்ற காற்றுக்கு கிரேக்கத்தில் பயன்படுத்திக் கொண்டனர். ஏர் = விரிந்த வயல் வெளி, உயர்ந்த வான் வெளி. ஏரகன் = வான்வெளி போல் விரிந்த உயர்ந்த அறிவைக் கொண்டவன் ; ஏர் (Air)

c. 1300, "invisible gases that surround the earth," from Old French air "atmosphere, breeze, weather" (12c.), from Latin aer "air, lower atmosphere, sky," from Greek a r (genitive aeros) "mist, haze, clouds," later "atmosphere" (perhaps related to aenai "to blow, breathe"), which is of unknown origin. It is possibly from a PIE *awer- and thus related to aeirein "to raise" and




என்று கூறியவற்றையே பொருள் களின் நிலைகளாக வடிவமைத்தனர். ஆனால் விசும்பு எனச் சொல்லப்பெற்ற வெளி அல்லது ஆகாயம் இங்குச் சேர்த்துக் கொள்ளப்படவில்லை. பண்டைத் தமிழர் வெட்டவெளியை (Space) ஒரு இயற்கை மூலமாகப் பார்த்தது வியக்கத்தக்கச் செய்தியேயாகும்.

| | | |
|---|---|---|
| நிலம் | > | திடம் (Solid) |
| நீர் | > | நீர்மம் ((Solid) |
| தீ | > | தீய்மம் (Plasma) |
| வளி | > | வளிமம் (Gas) |
| விசும்பு | > | வெளிமம் (Space) |

கிரேக்கர்கள் விசும்பினைத் தனி மூலமாகக் காணவில்லை. எனவேதான் அவர்களின் இயற்கை பூதங்கள் நான்கிலேயே நின்றுவிடும்.

தமிழர், அண்டவெளியை குறிப்பிடும்போது arteria "windpipe, artery" (see aorta) on notion of "lifting, suspended, that which rises," but this has phonetic difficulties.

In Homer mostly "thick air, mist;" later "air" as one of the four elements. Words for "air" in Indo-European languages tend to be associated with wind, brightness, sky. In English, air replaced native lyft, luft (see loft (n.)). In old chemistry, air (with a qualifying adjective) was used of any gas.

To be in the air "in general awareness" is from 1875; up in the air "uncertain, doubtful" is from 1752. To build castles in the air "entertain visionary schemes that have no practical foundation" is from 1590s (also towers in the air; in 17c. English had airmonger "one preoccupied with visionary projects"). Broadcasting sense (as in on the air, airplay) is by 1927. To give

(someone) the air"dismiss" is from 1900. Air pollution is attested by 1870. Air guitar is by 1983. Air traffic controller is from 1956. ( Online Etymology Dictionary)

இஃது air ஏர் என்பதற்கான ஆங்கில வேர்ச்சொல் விளக்கம்.

முன்செல்வது தூக்கிப் பிடிக்கின் உயர்ந்து செல்லும். எனவே ஊகாரச் சுட்டு வேரில் முன்செலல் கருத்தில் உயர்வு கருத்தும் தோன்றும் என்பார் பாவாணர். இவ்வுகரத்தின் பின்னைத் திரிபாய் எகரம் தோன்றும் என்பதும் பாவாணர் காட்டும் தெளிவே.

உ>இ>ஈ>எ>ஏ

எக்குதல் = வயிற்றுப் பக்கத்தை மேலெழுவித்தல்.

எஃகுதல் = பஞ்சை மேலெழச் செய்தல்.

எட்டுதல் = உயர்ந்து தொடுதல்.

எடுத்தல் = தூக்குதல்.

எண்ணுதல் = மேன்மேற் கருதுதல், மேன்மேல் தொகையைப் பெருக்குதல்.

எத்துதல் = மேனோக்கி வெட்டியிழுத்தல் அல்லது உதைத்தல்.

எத்து = எற்று.

எம்புதல் = எழுதல்.

எவ்வுதல் = குதித்தெழுதல்.

எழுதல் = உயர்தல், படுக்கைவிட்டெழுதல்.

எழும்புதல்=உயர்தல்,படுக்கைவிட்டெழுதல்.

ஏ = உயர்ச்சி, பெருமை.

"ஏபெற் றாகும்" (தொல். உரி. 7)

ஏங்குதல் = நுரையீரலை யெழுவித்துப் பெருமூச்சு விடுதல்.

ஏண் = உயர்ச்சி. ஏண் – ஏணி = உயரச் செல்லும் கருவி.

ஏண் – சேண் = உயர்ச்சி.

ஏண் – ஏணை = தொங்கும் தொட்டில்.

ஏத்தாப்பு (ஏத்த யாப்பு) = மேலணியும் வல்லவாட்டு.

ஏத்துதல் = உயர்த்திப் புகழ்தல், வழுத்துதல்.

ஏந்துதல் = உயரக் கையில் தாங்குதல், ஏந்தல் = குடிகளைத் தாங்கும் காவலன்.

ஏப்பம் = வயிற்றினின்று மேலெழுங் காற்று.

ஏர்தல் = எழுதல்.

ஏலுதல் = கையால் அல்லது மனத்தால் ஏந்துதல்.

ஏறுதல் = மேற்செல்லுதல்.

( வேர்ச்சொல் கட்டுரைகள் 1– பக்கம் 34, பாவாணர்)

உந்தி முன்செல்வது உயர்ச்சிப் பொருளிலும் கருத்தாய் அமைவதால் உ>எ>ஏ உயர்ச்சியைக் குறித்து ஏர் என்றாகி எழுதலையும் உயர்ச்சியையும் குறித்தது. உயர்ந்த வான் விரிந்து விண்ணைக் கிடப்பதால் ஏர் விரிவையும் குறித்தது. இவ்வகன்ற விரி பொருளே விரிந்த வயல்வெளியையும் குறித்தது.

இதே போல் வெளி எனும் அருந்தமிழ்ச் சொல்லும் அப்படியே ஆங்கிலத்தில் Valley என வழங்குகின்றது. இரண்டு மலைகளுக்கிடையே நீரோட்ட வெளியையும் ஆற்றுப்படுகை வெளியையும் இவ்வாறு குறிப்பிடுகின்றனர். தமிழில் உள்ள காயம் எனும் சொல்லே Sky என ஆங்கிலத்தில் மாறியது. காய் எனும் கருமைப் பொருளில் அமைந்த சொல்லிலிருந்து காய் > காயம் என விண்ணுக்குச் சொல் உருவாகியது. இதனையே வடமொழியில் ஆகாயம்> ஆகாசம்> ஆகாஷ் எனத் திரித்துக் கொண்டனர்.

'காய்' எனும் மூலச் சொல்லிலிருந்து Sky என இலத்தினுக்குத் திரிந்து பின்னர் இச்சொல் ஆங்கிலத்திற்கு வந்தது எனலாம். 'விசும்பு' எனும் சொல்லும் விள்> விரி > விசி எனத் திரிந்து விசும்பு ஆகியிருக்கிறது.

"முகிலுக்கும் அது நிற்கும் வானிற்கும் விண் என்னும் பெயருண்மையால், அப் பெயரை அடியாகக் கொண்ட விண்டு என்னும் பெயரும் திருமாலுக்கு ஏற்பட்டது.

விள்ளுதல் = விரிதல், திறத்தல், வெளியாதல்.

விள் – விண் = வெளி, வானம், முகில், மேலுலகம்.

விண் – விண்டு = வெளி, வானம், முகில், திருமால், மேலுலகம்."

எனப் பாவாணர் தம் தமிழர் மதம் எனும் நூலில் குறித்துள்ளார்.

சூரியனின் பாதையும் உலகத்தின் பாதையும் ஒன்று சேர்க்கின்ற புள்ளி 'விழுப்புள்ளி' எனப்படு கின்றது.

மார்ச் 21ம், செப்டம்பர் 21ம் இந்த விழுப்புள்ளி ஏற்படுகின்ற காலம் எனக் குறிப்பிடப்படுகின்றது. இக்காலத்தில் இரவும் பகலும் சரிசமமாக இருக்கும். இவ் விழுவப் புள்ளியே விழுவம் > விசுவம் என மாறியதாக அறிஞர்கள் சிலர் குறிப்பிடுகின்றனர். இதுவே வடமொழியில் விஷ்வம்> விஷ்ணவம் > வைஷ்ணவம் என மாறியிருக்கிறது என்பது அத்தகையார் கருத்து. ஆனால் மொழி ஞாயிறு தேவநேயப் பாவாணர் அவர்கள் விரி பொருளில் வரும் விள் எனும்

சொல்லிலிருந்து விள்>விண்> விண்டு என்றாகி விண்டு(தமிழ்) > விண்ணு என மருவி விண்ணு > விஷ்ணு என வடமொழியில் திரிந்திருக்கிறது என்கிறார். பின்னர் விஷ்ணுவிலிருந்து வைஷ்ணவம் உருவாகியிருக்கிறது. இதுவே பின்னர் தமிழில் தமிழ் மரபுக்கேற்ப வைணவம் என மாறியிருக்கின்றது.

திருமால், சிவன் எனும் இரு கடவுட் படைப்பும் தமிழரின் இருமை வகை கொள்கையின் விளைவேயாகும். நீரைக் குறித்த நீர் > நீரணண்> நாரணன் வடிவும், சிவ = சிவப்பு, சிவன்> செம்மையானவன், சிவந்தவன் எனும் நெருப்பைக் குறித்த சிவ வடிவும் இருமைக் கொள்கையின் வெளிப்பாடுகளே. இவையே பின்னால் கோட்பாடுகளையுடைய சமயங்களாக உருவெடுத்தன.

தமிழரின் விண்ணியல் சார்ந்த அறிவியக்கம் விண் + ஞானம் (காண் > க்ஞான் > ஞானம், தமிழின் அறிவுக்கண்ணால் காணல், காண் க்ஞான் என வடமொழியில் மாறியது என்பார் பாவாணர்) என விண்ணைப்பற்றிய அறிவாக (ஞானமாக) அமைந்து மிக முதிர்ந்த விளக்கமாக உருவெடுத்தது என்பது மறுக்க முடியாத உண்மையாகின்றது.

தமிழ் 'கோள்' எனும் உருண்டு திரண்டு வட்ட வடிவமானது எனப் பொருள் படும். இதனைக் கோளம் என்றும் கூறுவர். கதிரவைனைச் சுற்றிக் கொண்டி ருக்கின்ற கோள்கள் அனைத்தும் வட்ட வடிவமானவை என்பது அறிவியல். இதனைப் பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்பதாகவே கண்டறிந்தது தமிழரின் அறிவு.

உல்> குல் > குள் > கொள்

உல் = வளைவுக் கருத்தில் அமைந்த வேர்ச் சொல்

கொள் = கையை வளைத்துப் பெறுதல்

கொள்> கொள்ளு கையை வளைத்துப் பெறுதல்

கொள் > கோள் = வளைத்துப் பெறுதல், கோள் எனும் சொல் பெறுகின்ற, அடைகின்ற அடைவு நிலையையும் இதனால் குறித்தது.

கொள் > கொள்கை = நாம் நம்மில் பேணிக் கொண்டிருக்கின்ற நெறிமுறை.

கொள் > கோள் = குறிக்கோள். 'கோள்' எனும் இச்சொல்லே ஆங்கிலத்தில் அப்படியே Goal என வழங்குகின்றது.

கோள்> கோளு = வளைந்து செல்

கோள்> கோடு = வளைவாக உள்ள வரி

கோடு > கோடல் = வளைதல், நெறிமுறை பிறழ்தல்

'கோடு' என்று கேட்டதுமே நம் மனத்தில் நேராக இழுக்கப் பெற்ற வரி என்றுதான் நினைப்போம். ஆனால் அந்தச் சொல் உணர்த்தும் வேர்ப் பொருள் நேர் என்று காட்டவில்லை. இதனால் இச்சொல் பிழையானது என நாம் கருதிவிடக் கூடாது. கோடு எனப் பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்பதாகவே நம் பண்டைத் தமிழர் அறிவியல் நோக்குடனேயே சொல்லமைத் துள்ளனர். உருண்டை வடிவமாக விளங்குகின்ற இவ்வுலகில் ஒரு நேர்க் கோட்டினைக் கட்டாயமாக இட முடியாது. நாம் நேர்க்கோடு என்று அளந்து பார்த்துச் சொல்வதெல்லாம் ஒரு வட்டத்தின் ஒரு பகுதியையே, அதாவது வளைவின் ஒரு பகுதியையே கோடு என்கிறோம். உலகத்தில் ஓர் இடத்தில் நின்று கொண்டு ஒரு நீண்ட கோட்டினை இழுத்துக் கொண்டே வந்தால் இறுதியில் அது தொடங்கிய இடத்திற்கே தான் வரும். ஏனெனில் நம் நில உலகம் வட வடிவமானதாகும். இத்தகு அறிவியல் உண்மையை, தாம் உருவாக்கிய சொல்லுக்குள்ளேயே அமைத்திருப்பது, தமிழர்கள் மிகுந்த அறிவியல் முதிர்ச்சியுடைய இனத்தினர் என்பதையே உணர்த்துகின்றது.

இனி உலகம் எனும் சொல்லும் இத்தகு அறிவியல் கோட்பாட்டை உணர்த்தும் அரிய சொல்லேயாகும்.

உல் > உலவு = சுற்று

உல் > உலா= சுற்றுலா, வட்டமாக வளைந்து வருதல்

உல்> உலவு> உலகு = சுழல் வட்டத்தில் சுற்றும் உலகம்

உல் > உல > உலண்டு = வட்டமாக உருண்டிருக்கும் புழு

உல் >உலகு> உலகம் = வட்டமாக இருக்கும் பூமி

உல்> உர்> உருள்> உருண்டை.

மேற்கண்ட வட்ட வடிவ பொருளையும் சுழலும் பொருளையும் குறிக்கும் வேர்ச்சொல்லே உல் என்பதாகும். இந்த வேர்ச்சொல்லின் அடிப்படையிலேயே உலகம் எனும் சொல்லும் உருவாகியது. உலகம் உருண்டை என்பதை அறிவியல் சான்றுகளுடன் நிறுவியவர் 'கலிலியோ' எனும் அறிஞராவார். ஆனால் கலிலியோ சொல்லுவதற்குப் பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்பதாகவே நம் பண்டைத் தமிழ், 'உலகம்' எனும் அரிய சொல்லிலேயே உலகம் உருண்டை எனும் கருத்துருவைத் செறித்துள்ளது வியந்து போற்றி உரைக்க வேண்டிய ஒரு செய்தியாகும்.

பண்டைத் தமிழர், வானை உற்று நோக்கி சூரிய மண்டலத்தைச் சுற்றி ஒன்பது கோள்கள் இருப்பதைக் கண்டறிந்துள்ளனர். அவ்வொன்பது கோள்களுக்கும் தமிழிலேயே பெயர் அமைத்திருந்தனர். ஒன்பது கோள்களையும் தன்னகத்தே ஈர்த்து வைத்திருப்பது சூரியனாகும். சூரியனுக்கு ஞாயிறு, கதிரவன், பகலவன், பரிதி முதலான அருந்தமிழ்ப் பெயர்கள் உள்ளன. இவற்றுள் சூரியன் என்பது ஊசி போல் குத்துகின்ற சுட்டெரிக்கும் வெயிலை வீசுவதால் உருவாக்கப்பட்டச் சொல்லாகும்.

உல் > சுல்> சுலீர்
சுல் > சுலீர்> சுரீர்
சுல் >சுர் > சூர்
சுல் > சூர் > சூரி
சுல் > சூரி > சூரி +அன் = சூரியன்

சூரிய ஒளி மண்டையில் சுலீர் என்றும் சுரீர் என்றும் குத்துகிறது என மக்கள் வழக்கில் பேசுவதைக் கேட்டிருக்கலாம். சூரி என்பது பண்டை நாளில் ஓலைச் சுவடியில் துளையிடுவதற்காகப் பயன்படுத்தப்படும் துளையிடும் ஊசியாகும்.

நால்> ஞால் எனின் தொங்குதல் என்றும் நடு என்றும் பொருள்படும். நல்> நள் > நள்ளிரவு, நண்பகல் என்று சொற்கள் உருவாகியிருப்பதைக் காண்க. நல் >நய், நய் > அம் = நயம், நயம் > ஞயம். நயம் > நயன் = நடுநிலையான உண்மைத் தன்மை. நயன் > நயன்மை = நீதி. நயம்>ஞயம்> ஞாயம் = நீதி. நல் >நால் >ஞால்> ஞாய்> ஞாயிறு=நடுவாக இருந்து இயங்கி ஏனைய கோள்கைளை ஈர்க்கும் சூரியன்.

தொல்காப்பியத்தில் 'எல்லே இலக்கம்' என ஒரு நூற்பா வருகின்றது. 'எல்' என்பது இலக்கமாகும். 'எல்' எனின் ஒளி எனப் பொருள்படும். 'எல்' எனும் வேர்ச்சொல்லிருந்து எல்லன், எல்லியன், எல்லோன் முதலான சொற்கள் உருவாகி சூரியனையே குறித்தன. இந்த எல்லியன் எனும் சொல்லே Helium என மாறியிருக்கின்றது.

தமிழின் சுல் Sul Sol Solar என ஆங்கிலத்தில் மாறியது. சுல் > சொல் என ஒளியைக் குறித்த தமிழ் வேர் உலகில் பல்வேறு மொழிகளில் நேரடியாகவும் திரிந்தும் வழங்கி வருகின்றது.

காட்டாக :

so Ligurian †
sol Latin
sol Old Icelandic language
sol Old Swedish
sol Old Danish
sol Asturian
sol Aragonese language
sol Galician
sol Danish
sol Icelandic
sol Spanish
sol Catalan
sol Castilian
sol Extremaduran
sol Valencian
sol Balear Catalan
sol Ladino
Sol Fala
sol Mirandese
sol Portuguese
sol, sola Norwegian
sol Gjestal Norwegian
sol, sul Piedmont (Piemontese)
sol (sel) Faroe (Faroese)
sol Swedish
sol Nones
sol Emiliano Carpigiano
sol Emiliano Ferrarese
sol Korlai
solo Dyimini
sal Garo
sal Lalung
Sal Riang
sole Venetian
sole Italian
sole Neapolitan
sole Maceratese
sole Neapolitan–Calabrian
sole Norman
sole Nynorsk
sola Norwegian

சூரியனை நடுவிடமாகக் கொண்டு இயங்கும் கதிரவ நடுவியக்கத்தை Heliocentric என்று ஆங்கிலத்தில் குறிப்பிடுவார்கள். இந்தக் கதிரவ நடுவியக்க முறையை குறிக்கும் மிக நுட்பமான அறிவியல் சொல்லே 'ஞாயிறு' என்பதாகும்.

இன்றைய அறிவியல் உணர்த்தும் அறிவியல் கருத்துருவைத தமிழ்ச் சொற்கள் வாயிலாகப் பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்பதாகவே தமிழர்கள் உணர்த்தியுள்ளனர்

என்பது தமிழினத்தின் மிகத் தொன்மையான நுட்பமான அறிவியல் மூதறிவைக் காட்டுகின்றது.

'சூரியன்' எனும் சொல்லின் வேர்ச்சொல்லாக இருப்பது 'சுல்' என முன்னரே கண்டோம். சுல் எனும் அதே வேரடியிலிருந்து உருவாகியதே சுல்> சொல்> சொன் > சுன்> sun, sol, solar எனும் ஆங்கிலச் சொற்களாகும்.

சூரிய மண்டலத்தில் இருக்கும் கோள்களில் சூரியனையும் சேர்த்து மொத்தம் தொண் கோள்கைளைப் பண்டைத் தமிழர்கள் கணக்கிட்டுள்ளனர். அவை, ஞாயிறு, நிலவு, செவ்வாய், அறிவன், வியாழன், வெள்ளி, காரி, இராகு, கேது என்பன. நிலவுக்குத் தமிழில் மதி, திங்கள் எனப் பெயர்கள் உண்டு. தேய்பிறை, வளர்பிறை காலக் கட்டங்கள் முப்பது நாள்கள் பிடித்து புவியைச் சுற்றி வருகின்றமையால் கால அளவீட்டை குறிப்பிடும் 'மதி' எனும் அருந்தமிழ்ச் சொல்லால் நிலவு குறிப்பிடப்பட்டது. 'மா' எனும் ஓரெழுத்து ஒரு மொழிச் சொல்லானது பண்டை நாளில் அளவு எனும் பொருளில் பயன்படுத்தப்பட்டது. 'மா' எனின் பெரிய, கரிய அளவு, மாம்பழம், விலங்கு எனும் பொருள்படும். மாத்தல் என்றால் அளத்தல் என்று பொருள்.

உல் > பொருந்துதல், ஒத்தல் கருத்து வேர்.

உல்> முல்>மல்> மால் > மா = பொருத்திப் பார்த்த அளவு

மா >மான்> மானம் = அளவு

மான் >மானி = அளக்கும் கருவி.

வெப்பமானி = வெப்பத்தை அளவிடும் கருவி.

மா > மாத்தல் = அளத்தல். மா > மாத்திரை = எழுத்தைப் பலுக்க எடுக்கும் கால அளவு. ஆங்கிலத்தில் meter எனும் சொல் 'அளவு' எனும் பொருளில் தமிழ்ச் சொல்லான 'மாத்திரை' எனும் சொல்லிலிருந்து திரிந்து சென்றதாகும். இச்சொல்லின் அமெரிக்க எழுத்துக் கூட்டல் metre என்பதாகும். கிரேக்க, இலத்தீன் போன்ற மொழிகளில் இச்சொல், அளவு எனும் பொருளிலேயே வழங்குகின்றது.

"O.E.: Meter, O.fr. : Metre, L.: Metrum Gr: Metron = Measurement.

மாத்திரை Matra Metre Meter என இச்சொல் ஆங்கிலத்திற்கு மருவியது எனலாம். எனவே மாத்தல் எனும் கால அளவீட்டு பொருளிலேயே நிலவுக்கு 'மதி' எனும் அருந்தமிழ்ச்சொல் உருவாக்கப்பெற்றது எனலாம். இவ்வடிப்படை யிலேயே மதி >> மாத்தல் (அளத்தல் ♯வினை) . மாதம் = நிலவின் ஒரு முழுச் சுற்றின் கால அளவு என சொல்லடைவுகள் உருவாகின. 'மாதம்' எனும் கால அளவுச் சொல்லே month என மருவியது.

'திங்கள்' எனும் சொல் ஒளிவிட்டுத் திகழ்ந்து கொண்டிருப்பது எனும் பொருளில் 'நிலவை' குறித்ததாகும். தக தக = ஒளி வீசித்திகழ்தல்.

தக >தகு>திகு> திகள்> > திங்கள் ( நிலா)

தகு> தகு>தங்கு>தங்கம் = ஒளிர்விடும் பொன். நிலவுக்கு அதன் சிறப்பினால் திங்கள் எனப் பெயர் வந்தமையால் மாதத்தையும் திங்கள் என்றனர். ஞாயிற்றுக்கு அடுத்து மாதக் கால அளவுக்குப் பயன்படுத்துகின்றமையால் ஞாயிற்றுக் கிழமைக்கு அடுத்து திங்கள் கிழமை என நிலவை முன்னிறுத்தியே பெயரமைத்தனர். திங்கள் எனும் நிலவு புவியோடு மிக நெருங்கிய துணைக்கோளமாகும்.

உல் > நுல் > நுர் = ஒளி

நுல்> நில் = ஒளி

நில்> நிலா = ஒளி வீசும் மதி.

இங்கு நிலா, நிலவு எனும் சொற்களும் ஒளிப் பொருளிலேயே வழங்குகின்றன என்பதும் குறிப்பிடத்தக்கது.

அதற்கடுத்து நெருங்கி இருப்பது 'செவ்வாய்' கோளே. செவ்வாய் எனும் சொல்லே இக்கோள் சிவப்பானது எனும் பொருளைக் காட்டும். இக்கோளின் மண்ணும் வானும் சிவப்பாக இருக்கின்றன என்பதை அமெரிக்கா அனுப்பிய வான் களங்கள் உறுதிப்படுத்தின. ஆனால் பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்பதாகவே இக்கோளுக்குச் 'செவ்வாய்' எனத் தமிழர்கள் பெயரமைத் திருப்பது விந்தையிலும் விந்தையே. இக்கோள் இரும்புத் தீயதை ( Ferum oxide ) நிறைந்த கோளாக இருப்பதால் செந்நிறமாகத் தோன்றுகின்றது என்பர் அறிவியலாளர்.

Mars was named by the ancient Romans for their god of war because its reddish color was reminiscent of blood. Other civilizations also named the planet for this attribute – for example, the Egyptians called it "Her Desher," meaning "the red one." Even today, it is fre–quently called the "Red Planet" because iron minerals in the Martian dirt oxidize, or rust, causing the surface to look red. ( NASA )

உழவராயும் கடலோடிகளாயும் வீற்றிருந்த தமிழரின் வான் கணியர் தெளிந்த வானைப் பல காலும் ஆழ்ந்து உற்று நோக்கி ஆய்ந்து கோள்களுக்கும் உடுமண்டலங்களுக்கும்

பெயரமைத்தது குறிப்பிடத்தக்கது.

அடுத்து புதன் எனப்படும் அறிவன் கோள் தமிழர் கண்டறிந்த புதிய கோளாகும். புது > புதன் என இதற்குப் பெயர். அதே வேளை பிங்கல நிகண்டில் இக்கோளுக்கு அறிவன் எனும் பெயரும் இடம்பெற்றுள்ளது குறிப்பிடத்தக்கது. மொழி ஞாயிறு ஞா.தேவநேயப் பாவாணர் இத்தகு நிகண்டுகளை ஆய்ந்தே இக்கோளுக்கு அறிவன் எனத் தம் நூல்களில் சொல்லாட்சி செய்தார். புத்தி எனும் சொல்லினின்றே இச்சொல் உருவாகியதாகக் கருதுவர். புது, புத்தம், புதுமை எனுஞ் சொற்களின் வழி புதுவதைக் கண்டறியும் அறிவு புத்தி ஆகலாம். இருப்பினும் பாவாணர் வழியிலேயே நாம் புதன் என்பதற்கு அறிவன் என்றே ஆளுகின்றோம்.

பிங்கல நிகண்டில் சனிக்கோளுக்குக் 'காரி' எனும் பெயர் குறிப்பிடப் பட்டுள்ளது.

கல் > கருமை எனும் பொருள் வரும் வேர்ச்சொல்.

கல் > கலி =கருமை.

கருமைப் பொருளில் அமைந்த கொடுமை காலம் (கலி காலம்).

கல் > கலி> சலி > சனி என வடமொழியில் இச்சொல் கருமை பொருளில் திரிபடைந்தது. சனிக் கோளத்தைச் சுற்றி கரிய தூசு மண்டலம் சூழ்ந்திருப்பதால் இக்கோளைப் பண்டைத் தமிழர் கருமைப் பொருளில் காரி என்றனர்.

வியாழன் என்பது கோள்களிலேயே மிகப் பெரிய கோளாகும். தமிழில் வியல் எனின் பெரியது எனப்பொருள்படும். வியல் > வியலம் > வியாலம் > விசாலம் = பெரிய.

நம் தாத்தா பட்டிமார்கள் பெரிய இடத்தை விசாலமான இடம் என்று கூறுவதைக் கேட்டிருப்போம். வியாழக்கிழமையை விசாலக்கிழமை என்றும் கூறுவர். எனவே 'வியாழம்' என்றால் பெரிய கோள் எனவாகும். கோள்களிலேயே பெரிய கோள் என்பதால் இக்கோளுக்கு வியாழன் கோள் எனப் பெயரிடப்பட்டிருப்பதை எண்ணி நாம் வியக்காமல் எப்படி இருக்க முடியும்.

அடுத்து வெள்ளிக் கோள் வெளிறி ஒளி மிகுந்து வீசும் கோளாகும். இதனால் இது வெள்ளிக்கோள் எனப் பட்டதாம்.

ஞாயிறு ( Sun) = நடுவில் நின்று ஈர்க்கும் நெருப்புக் கோளம்

திங்கள் ( Moon) = ஒளி விட்டு இரவில் தகதகவென்றிருக்கும் நிலா

செவ்வாய் ( Mars) = சிவந்து விளங்கும் கோள்

அறிவன் ( Mercury) = புதுவதாக அறியப்பட்ட கோள்

வியாழன் ( Jupiter ) = மிகப்பெரிய கோள்

வெள்ளி ( Venus) = வெள்ளி மாழை நிறைந்த கோள்

காரி (Saturn) = கருமைப் படலம் சூழ்ந்த கோள்

ஐயா அருளியார்

Uranus – விண்ணன்

Neptune – சேணன்

Pluto– தூரியன்

எனக் கதிரவ வட்டணையில் உள்ள ஏனைய கோள்களுக்கும் பெரிட்டது இங்குக் குறிப்பிடத் தக்கது.

இராகு, கேது என்பன ஐந்திரத்திலும் கணியத்திலும் சொல்லப் பெற்றவை

இராகு = கண்ணுக்குத் தெரியாமல் இருண்டிருக்கும் கோள் போன்ற புகைத் தோற்றம்

இருள் = கருமை , இரா. இரா > இராகு

கேது = சிவந்திருக்கும் தொலைவிலுள்ள கோள் போன்ற புகைத் தோற்றம்.

(சேது> கேது , சே=சிவப்பு, சேது சிவப்பு நிறம்)

இராகு, கேது எனும் இவ்விரண்டும் கண்ணுக்கு எளிமையில் புலப்படா வண்ணம் தொலைவிலிருந்தமையால் இவற்றைக் கரந்துரை கோள்கள் என்றனர். இவை அறிவியல் படி நிறுவப்படவில்லை. ஆனால் இவை நிழல் போல் தோன்றியமையால் இவற்றையும் குறித்து கரந்துறை கோள் என்றது எண்ணத்தக்கது.

தமிழரின் விண்ணியலைப் பற்றிய அறிவாண்மையை அவர்கள் அதற்கெனப் படைத்துள்ள சொற்களின் வாயிலாகவே நுணுகி நுணுகி ஆய்ந்து ஆய்ந்து வியந்து வியந்து போற்றலாம். அதற்குச் சொல்லாய்வு அறிவு மிகப்பேரளவு துணைபுரியும் என்பது மறுக்கொணா உண்மையாகும்.

வெல்க தேவநேயம்.

# கடிதாய் ஓடு




முனைவர் ஆ. அரிமாப் பாமகன்
மேனாள் ஆங்கில விரிவுரையாளர்
புதுச்சேரி


"வாடாத புஷ்பமே வற்றாத செல்வமே
தேடாத தெய்வீக பிம்பமே
தறி நாடாவைப் போல் ஆடும் இதயத்திலே
தினமும் உந்தன் தாபமே தாபமே கோபமேன்?

வனிதா மணியே இனி வாராய் அமுதக் கனியே
இனி வாராய் அமுதக் கனியே
வந்தருள் சுந்தரி சிந்தை கவர்ந்திட
தந்தருள் இன்பம் நீயே
இன்னும் இந்த மௌனம் ஏனோ வனிதா மணியே!
(தஞ்சை இராமையா தாசு, அடுத்தவீட்டுப் பெண்).
*****

"கடி என் கிளவி
வரைவே கூர்மை காப்பே புதுமை
விரைவே விளக்கம் மிகுதி சிறப்பே
அச்சம் முன்தேற்று ஆ ஈர் ஐந்தும்
மெய்ப்படத் தோன்றும் பொருட்டு ஆகும்மே!"
(தொல்காப்பியம், சொல்லதிகாரம், உரியியல் 85).

"கடியென் கிளவி காப்பே கூர்மை
விரையே விளக்கம் அச்சஞ் சிறப்பே
விரைவே மிகுதி புதுமை யார்த்தல்
வரைவே மன்றல் கரிப்பி னாகும்."
(நன்னூல் 455).
* கடி = கூர்மை, விரைவு,...

கடி = கூர்மை,
கடி நுனைப் பகழி = கூர்மையான நுனியை உடைய அம்பு.

கடி = விரைவு,
"பொன் போல் புதல்வர்ப் பெறாஅதீரும்
எம் அம்பு கடி விடுதும் நும் அரண் சேர் மின் என
அறத்து ஆறு நுவலும் பூட்கை மறத்தின்"
(புறநானூறு 9: 4–6)
* எம் அம்பு கடி விடுதும் = எம் அம்புகளை மிக விரைவாகச் செலுத்துகிறோம்.

கடி > கடு(ம்) = விரைவு,
"கடு நடை யானை கன்றொடு வருந்த"
(நற்றிணை 105: 4)
* கடுநடை = விரைந்த நடை.

கடி > கடிய = விரைவு,
"வேனில் நீங்கக் கார் மழை தலைஇக்
காடு கவின் கொண்டன்று பொழுது பாடு சிறந்து
கடியக் கடவுமதி பாக!
நெடிய நீடினம் நேர்இழை மறந்தே!"
(ஐங்குறுநூறு 484).
* கடியக் கடவுமதி = விரைந்து செலுத்துவாயாக!

கடி > கடிது = விரைவு,
"காற்றி னுங்கடி தாகி நடப்பதோர்
ஏற்றி னும்மிசைந் தேறுவ ரென்பொடு
நீற்றி னையணி வர்நினை வாய்த்தமைப்
போற்றி யென்பவர்க் கன்பர்புத் தூரரே".
(அப்பர் தேவாரம் 1687)

உரை: புத்தூரில் எழுந்தருளியுள்ள இறைவர். காற்றைவிட விரைந்து நடப்பதாகிய ஒப்பற்ற காளையினும் மனம் ஒத்து ஏறுவர்; எலும்பும் திருநீறும் அணிவர்; 'தம்மையே நினைவாகிப் போற்றி'என்று வழிபடுவார்க்கு அன்பர் ஆவர்.

"வடிவின் மருங்குலாள் மாரனைப் போல் மேலோர்
முடிவுஇல் உணர்வை முடிப்பாள் கடிது ஓடி"
(மூவருலா 1 :196)
* கடிது ஓடி = விரைந்து ஓடி.

கடி > கடை = கூர்மை,
"ஆளுகைக்கு உன்றன் அடித் தாமரைகள் உண்டு அந்தகன்பால்
மீளுகைக்கு உன்றன் விழியின் கடை உண்டு மேல் இவற்றின்
மூளுகைக்கு என் குறை நின் குறையே அன்று முப்புரங்கள்
மாளுகைக்கு அம்பு தொடுத்த வில்லான் பங்கில் வாள்நுதலே!"
(அபிராமி அந்தாதி 39)
* விழியின் கடை உண்டு = விழியின் கூர்மை உண்டு.

கூர்மையாக விரைந்து சென்று தாக்கும் ஏவுகணைக்கு (s)cud என்று பெயரிட்டனர்.
கடி – கட் – scud. (பஞ்சு – sponge, கில் – skill ஆனது போல!)

ஈரான் – ஈராக்குப் போரின் போது (1980) அதிகம் பேசுபொருளானது scud ஏவுகணை!
* Scud – the NATO name for a missile developed by the Soviets in the 1960s; probably from scud in the sense "to move quickly"

விரைந்து பள்ளிக்குச் செல்ல அறிவுரை சொன்னார் பாவேந்தர்,
"படியாத பெண்ணாய் இருந்தால், – கேலி

பண்ணுவார் என்னை இவ்வூரார் தெரிந்தால்!
கடிகாரம் ஓடுமுன் ஓடு! – என்
கண்ணல்ல, அண்டை வீட்டுப் பெண்களோடு!"

பாவின் இழைகளைப் பின்னலாக்கித் தரப் பயன்படுவது விழுது. விழுதும் கோல்களும் இணைந்து பண்ணுவது பண்ணை. இப் பண்ணையே பிணிப்பை – பிணிக்கட்டை உருவாக்கும். இப் பிணிப்பின் ஊடே ஊடு – ஊடை நூலை எடுத்து இரு திசைக்குமாக – வலம் இடமாக, இடம் வலமாக – விரைந்து ஓடி வருவது குழல் – நாடா எனப்படும். இவ் வூடை நூலைப் புடவையோடு சேர்த்து வலிவாக அடித்துப் பொருத்தும் சட்டம் – அச்சுச் சட்டம், இக் காலத்தில் 'செட்டில்' எனப்படுகிறது. இந்த இழையைப் பொருத்தும் செயல் 'வெட்டு' எனப்படும். 'இழைக்கு ஒரு வெட்டு' என்பது நெசவாளர் சொலவம்.
ஒரு வேட்டியில், துண்டில், சேலையில் எத்தனை ஊடிழைகள் உள்ளனவோ அத்தனை முறைகள் வலக்கை நாடாவை இழுத்திருக்கும் அல்லது தள்ளு கட்டையில் பிணிக்கப்பட்ட மணிக்கயிற்றுக் குண்டினை இழுத்திருக்கும், அத்தனை முறைகள் இடக்கை அச்சுச் சட்டத்தை (செட்டில் shuttle) வெட்டியிருக்கும். அத்தனை முறைகள் இரண்டு கால்களும் இயங்கி, விழுதுகளை ஏற்றி இறக்கிப் பிணிப்பை உண்டாக்கப் பாதங்கள் மிதிக்கட்டையை மிதித்திருக்கும். கால்கள் இயங்கும் இப் பள்ளமான பகுதி காற்குழி எனப்படும். கொசு கடித்துச் சிலர் கால் யானைக்கால் ஆவதும் உண்டு.
இந்தத் தறி நெசவில் ஒருவர் கூலி வாங்க ஒட்டுமொத்தக் குடும்ப உறுப்பினர்களும் உழைக்க வேண்டும். (அச்சுப்பிணைத்தல். நூலிழைத்தல், தார் திரித்தல்,...)! ஐம்புலன்களும் அமைதியாக இயங்க வேண்டும்!!

இந்த அச்சுச் சட்டம் விரைவாகப் போய் போய் வருவதை, விரைவாக நாடா ஓடி ஓடி வருவதைச் சட்டமென்றனர். அது செட்டில் ஆகி shuttle ஆகியது. தறித் தொழிலுடன் தொடர்புடையது shuttle என்னும் சொல் என்பது சொல் வரலாறு.

கடி – கடியாக = வேகமாக; கடியாக > கெடியாக (பேச்சு வழக்கு).
கடி > கதி – கதித்தல் = விரைந்து செல்லல். கதி = வேகம்.

"கதித்து எழு மாதிரம் கல்லென ஒலிப்பக்
கறங்கு இசை வயிரொடு வலம் புரி ஆர்ப்ப "
(பதிற்றுப்பத்து 92: 9–10).

"மதித்த களிற்றினில் வாள் அரிஏறு
கதித்தது பாய்வது போல் கதி கொண்டு
குதித்தனன் மால் வரை மேனி குழம்ப
மிதித்தனன் வெம் சின வீரருள் வீரன்"
(கம்பராமாயணம், சுந்தர காண்டம் 9, 55).
* கதித்தது = விரைந்த அது, கதி கொண்டு = வேகம் கொண்டு.

துரிதகதி – இருபிறப்பிச் சொல், bagபை போல.
கதி >    (இந்தி).

'விரைந்து வா' என்பதை நாட்டுப்புற மக்கள் 'கடிய வா ', 'கதிக்க வா' என்பர்.

கடி > கடு > கட் > scud, மூலம் தெரியவில்லை எனப்படும் சொல்!

scud (v.)
"to move quickly, shoot or fly along with haste," 1530s, a word of uncertain origin, perhaps echoic somehow, or perhaps it is a variant of Middle English scut "rabbit, rabbit's tail," in reference to its movements (see scut (n.1)), but there are phonetic difficulties with that. Perhaps it is rather from a North Sea Germanic source akin to Middle Low German, Middle Dutch schudden "to shake" (see quash). OED is against connection with Danish skyde "shoot, push, shove," Old English sceotan "to shoot." Related: Scudded; scudder;

shuttle (n.)
Middle English shitel, "missile; a weaver's instrument," also the name of a children's game, from Old English scytel "a dart, arrow," from Proto-Germanic *skutilaz (source also of Old Norse skutill "harpoon"), from PIE root *skeud- "to shoot, chase, throw.
The original sense in English is obsolete; the weaving instrument is so called from being "shot" across the threads. The sense of "train that runs back and forth" is recorded by 1895, from the image of the weaver's instrument's back-and-forth movement over the warp; extended to aircraft or air service by 1942, to spacecraft by 1969 in science, 1960 in science fiction. In some other languages, the weaving instrument takes its name from its resemblance to a boat (Latin navicula, French navette, German weberschiff).

shuttle (v.)
1540s, transitive, "move (something) rapidly to and fro," from shuttle (n.); the sense of "transport via a shuttle service" is recorded from 1930. The intransitive sense of "go or move backward and forward like a shuttle" is from 1843. Related: Shuttled; shuttling.



# உணர்தலும் உணர்த்தலும் – உரியியலின் கருத்தாடல் நோக்கு

பேரா. முனைவர் ப. கொழந்தசாமி,
அரசினர் ஆய்வு நிறுவனம், புதுச்சேரி.

தொல்காப்பியம் தமிழ் மொழி / இலக்கிய அமைப்களையும் இயங்கியலையும் வகுத்துரைக்கின்றது. அவற்றுள் சொற்பொருள் விளக்கம் ஒன்றாகும். ஆங்காங்கே பொருண்மையியல் விளக்கங்களைச் சுட்டினாலும் நூல் நெடுகிலும் பொருண்மையியல் கொள்கைகள் எடுத்துரைக்கப்பட்டுள்ளன. அந் நிலையில் உரியியல் சிறப்பாக நோக்கத்தக்கது. உரிச்சொற்களின் அகராதி/ சூழல் பொருளை விளக்கும்போது, மொழியின் அடிப்படைப் பயனான கருத்தாடல் நுட்பத்தையும் தொல்காப்பியர் வகுத்துரைத்துள்ளார். ஒரு கருத்தாடலில் உணர்த்துவோன்+ கருத்து + உணர்வோன் என்பன அடிப்படையானவை. உணர்த்துவோனுக்கும் உணர்வோனுக்கும் இடையில் ஒத்துணர்வு நிலவினால் மட்டுமே கருத்துப் பகிர்வு தெளிவாகும் என்பதை, பொருட்குத் திரிபில்லை உணர்த்தவல்லின் ( உரி. நூற்பா 93) என்று கருத்தை உணர்த்துவானின் கடமையையும் பொறுப்பையும் சுட்டுகின்றார். உணர்த்துவோன் மரபறிந்து தெளிவாக விடுப்பின் உணர்வோன் தவறின்றிப் புரிந்துகொள்ளலாம். ஆகவே உணர்வோனைக் கருதி உணர்த்தவேண்டும். விடுத்த கருத்தை உள்வாங்கி முறையாகப் புரிந்துகொள்ள உணர்வோன் முயலலாம்; தேவைப்படின் விளக்கம் கோரலாம்/ தேடலாம். அடுத்து, உணர்ச்சி வாயில் உணர்வோர் வலித்தே ( உரி. நூற்பா 94) என்று, விடுக்கப்பட்ட கருத்தைப் பொது அறிவு, பட்டறிவு, உணர்ச்சி ஆகியவற்றால் உணர்வோன் தெளிவாக விளங்கிக்கொள்ளலாம். இத்தகைய கருத்தாடல் திறனுக்கு மொழித் திறன் தேவை. ஆகவே மொழித் திறன் மேன்மைக்கு ஒவ்வொருவரும் முதன்மை தரலாம். தொல்காப்பிய விளக்கத்தைக் கொண்டு தெளிவான / அறிவார்ந்த கருத்தாடலில், உணர்த்தலிலும் உணர்தலிலும் வெற்றி காணலாம். இது நல்லிணக்கத்திற்கும் உறவுக்கும் அறிவாக்கத்திற்கும் உறுதுணையாகும்; வளம் மிக்க மானுடமும் வாய்ப்பாகும்.

நன்றி : இணையத் தரவுகள்

# அகரமுதலி இயக்ககத் தமிழ்க் கலைக்கழகத்தின் 167–ஆவது கூட்டம்




தமிழ்நாடு அரசு, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத் தமிழ்க் கலைக்கழகத்தின் 167–ஆவது கூட்டம் 28.10.2024 ஆம் நாள் நடைபெற்றது.

இன்றைய அறிவியல் தொழில்நுட்ப உலகில் நாள்தோறும் பெருகிவரும் பல்வேறு துறைசார்ந்த, பிறமொழிச் சொற்களுக்கு இணையான தமிழ்க்கலைச்சொற்களை உடனுக்குடன் வடிவமைத்து, மக்களின் பயன்பாட்டிற்குக் கொண்டுவரும் நோக்கத்தை அடிப்படையாகக் கொண்டு, தமிழ்நாடு அரசு தமிழ் வளர்ச்சித் துறை செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலி இயக்ககத்தின் 'தமிழ்க் கலைக்கழகம்' செயற்பட்டுவருகிறது. மக்களின் பேச்சுவழக்கிலும், ஊடகங்களிலும் காணப்படும் பிறமொழிக் கலைச்சொற்கள் இவ்வியக்ககப் பதிப்பாசிரியர்கள், உதவிப் பதிப்பாசிரியர் மற்றும் தொகுப்பாளர்களால் தொகுக்கப்பட்டு, அவற்றிற்கிணையான தமிழ்க் கலைச்சொற்கள் வடிவமைக்கப்படுகின்றன. அச்சொற்கள் திங்கள் இருமுறை நடைபெறும் தமிழ்க் கலைக்கழகக் கூட்டங்களில் சீராக்கம் செய்யப்பட்டு சொற்குவை வலைத்தளத்தில் பதிவேற்றம் செய்யப்படுகின்றன.

அகரமுதலி இயக்கக இயக்குநர் (மு.கூ.பொ.) திருமதி க. பவானி அவர்கள் தலைமையில் நடைபெற்ற தமிழ்க் கலைக்கழகத்தின் 167–ஆவது கூட்டத்தில், அலுவல்சாரா உறுப்பினர்களான புலவர் வெற்றியழகன், முனைவர் இரா.கு. ஆல்துரை, ஆகியோர் பங்கேற்றனர். மேலும், நூல் மதிப்புரையாளர் கவிஞர் மெய்ஞானி பிரபாகர பாபு மற்றும் அலுவல்சார் உறுப்பினர்கள் ஆகியோர் பங்கேற்றனர். இக்கூட்டத்தில் 115 தமிழ்க் கலைச் சொற்களுக்கு வல்லுநர் குழு ஏற்பளித்துள்ளது.

**ஏற்பளிக்கப்பெற்ற கலைச்சொற்களுள் சில :**

| | |
|---|---|
| Account Hijacking | கணக்குக் களவு |
| Ambipolar Field | எதிர்முனை மின்புலம் |
| Anisotropic Filtering | முத்திரட்சி வரைகலை |
| Artful Dodger | திறனேய்ப்பர் |
| Artful Toil | பசப்பு உழைப்பு |
| Artless Question | இயல்பு வினா |
| Banner Rotator | பதாகைச் சுழற்றி |
| Biosimilar | உயிரியல் மருந்து |
| Black Sheep | குழுக் கேடர் |
| Bridge Router | வலை இணைப்பி |
| Cash Buffer | இடைத்தேவை வைப்புத்தொகை |
| Cloud Motion | முகில் நகர்வு |
| Crispy Cone | நொறுவைக்கூம்பு |

# அகரமுதலி இயக்ககத்
# தமிழ்க் கலைக்கழகத்தின் 168–ஆவது கூட்டம்




தமிழ்நாடு அரசு, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத் தமிழ்க் கலைக்கழகத்தின் 168–ஆவது கூட்டம் 29.10.2024 ஆம் நாள் நடைபெற்றது.

அகரமுதலி இயக்கக இயக்குநர் (மு.கூ.பொ.) திருமதி க. பவானி அவர்கள் தலைமையில் நடைபெற்ற தமிழ்க் கலைக்கழகத்தின் 168–ஆவது கூட்டத்தில், அலுவல்சாரா உறுப்பினர்களான புலவர் வெற்றியழகன், முனைவர் இரா.கு. ஆல்துரை, திரு. அ. மதிவாணன், அறிவியல் ஒளி ஆசிரியர் திரு. நா. சு. சிதம்பரம் மற்றும் அலுவல்சார் உறுப்பினர்கள் பங்கேற்றனர். இக்கூட்டத்தில் 157 தமிழ்க் கலைச் சொற்களுக்கு வல்லுநர் குழு ஏற்பளித்துள்ளது.

**ஏற்பளிக்கப்பெற்ற கலைச்சொற்களுள் சில :**

| | |
|---|---|
| Herbal Therapy | மூலிகைப் பண்டுவம் |
| Herculean Task | அருவினை |
| Immense Pleasure | அகமலி உவகை |
| Key Player | முகாமையர் |
| Magnificent Display | பேருருக் காட்சி |
| Minuscule Letter | சிற்றெழுத்து |
| Moving Walkway | நகர் நடைப்பாதை |
| Pigheaded Person | ஒட்டாரக் குணத்தர் |
| Pink Of Health | நன்னலம் |
| Popular Restaurant | புகழ்பெற்ற உணவகம் |
| Porch Piracy | முகப்புக் களவு |

# அகரமுதலி இயக்ககத் தமிழ்க் கலைக்கழகத்தின் 169–ஆவது கூட்டம்




தமிழ்நாடு அரசு, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத் தமிழ்க் கலைக்கழகத்தின் 169–ஆவது கூட்டம் 18.11.2024 ஆம் நாள் நடைபெற்றது.

அகரமுதலி இயக்கக இயக்குநர் (மு.கூ.பொ.) திருமதி க. பவானி அவர்கள் தலைமையில் நடைபெற்ற தமிழ்க் கலைக்கழகத்தின் 169–ஆவது கூட்டத்தில், அலுவல்சாரா உறுப்பினர்களான புலவர் வெற்றியழகன், முனைவர் இரா.கு. ஆல்துரை, திரு. அ. மதிவாணன், அறிவியல் ஒளி ஆசிரியர் திரு. நா. சு. சிதம்பரம் ஆகியோர் பங்கேற்றனர். மேலும், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத் தமிழ்மொழி (ம) மொழியியல் புல உதவிப் பேராசிரியர் முனைவர் நா. சுலோசனா, நூல் மதிப்புரையாளர் கவிஞர் மெய்ஞானி பிரபாகர பாபு மற்றும் அலுவல்சார் உறுப்பினர்கள் பங்கேற்றனர். இக்கூட்டத்தில் 144 தமிழ்க் கலைச் சொற்களுக்கு வல்லுநர் குழு ஏற்பளித்துள்ளது.

**ஏற்பளிக்கப்பெற்ற கலைச்சொற்களுள் சில :**

| | |
|---|---|
| Fast Script | சுருக்க வரிவடிவம் |
| Hosting duties | விருந்தோம்பல் பணிகள் |
| Rescue mode | தரவு மீட்பு முறை |
| Broadcast partner | ஒலிபரப்புப் பங்காளர் |
| Money spinner | பணங்குவிப்பர் |
| Wartorn person | போர்ச் சிதைவாளி |
| Registry cleaner | வீண்பதிவு நீக்கி |
| Stock photo | இருப்புப் படம் |
| Shoulder shrugging | தோள் குலுக்கல் |
| Disjecta membra | எழுத்துத் துணுக்கு |
| Sabaton | பாதக் காப்பணி |
| inscrutability | அமுக்குணி |

# 3 வது பொதிகை புத்தகத் திருவிழா



15.11.2024 முதல் 24.11.2024 வரை

காலை 10:00 மணி முதல்
இரவு 10:00 மணி வரை

இ.சி. ஈஸ்வரன் பிள்ளை அரசு ஆண்கள் மேல்நிலைப்பள்ளி, தென்காசி மாவட்டம்.

**தமிழ் வளர்ச்சித் துறை**

**செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்**

| தொ. எண் | நூல் பெயர் | விலை ரூ. | கழிவு (35%) ரூ. | விற்பனை விலை ரூ. |
|---|---|---|---|---|
| 1. | இரண்டாம் மடலம் 'கா-கூ' முதல் எட்டாம் மடலம் 'வெ-வெள'வரை (17 தொகுதிகள் ) | 6000/- | 2100/- | 3900/- |
| 2. | ஒன்பதாம் மடலம் இணைப்பு மடலம் (இரண்டு தொகுதிகள்) | 800/- | 280/- | 520/- |
| 3. | பத்தாம் மடலம் அயற்சொல் மடலம் (மூன்று தொகுதிகள்) | 1200/- | 420/- | 780/- |
| 4. | பதினொன்றாம் மடலம் (தமிழ் அகரமுதலி வரலாறு) | 300/- | 105/- | 195/- |
| 5. | பன்னிரண்டாம் மடலம் (தமிழ்ச் சொற்பிறப்பு நெறிமுறைகள்) | 400/- | 140/- | 260/- |
| 6. | செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி சுருக்கப்பதிப்பு | 1000/- | 350/- | 650/- |
| 7. | தமிழ் வினைச்சொல் அகரமுதலி | 500/- | 175/- | 325/- |

விலைப்பட்டியலில் உள்ள நூல்கள் அனைத்தும் புத்தகத் திருவிழாவில் கிடைக்கும் என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறோம்.

செம்மொழித் தமிழ் காப்போம்!

செந்தமிழால் பேசுவோம் !



தமிழ்நாடு அரசு

தமிழ்வளர்ச்சித் துறை

# செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்

எண்.75, முதல் தளம், நகர் நிருவாக அலுவலக வளாகம்
சாந்தோம் நெடுஞ்சாலை, எம்.ஆர்.சி. நகர்
சென்னை–600 028.

Sorkuvai.tn.gov.in

044–22541209



# அகரமுதலித் தொகுதிகள்

## 35% கழிவு விலையில்

## நூல் விற்பனை

| தொ. எண். | நூல் பெயர் | விலை ரூ. | கழிவு (35%) ரூ. | விற்பனை விலை ரூ. |
|---|---|---|---|---|
| 1. | இரண்டாம் மடலம் 'கா–கூ' முதல் எட்டாம் மடலம் 'வெ–வெள' வரை ( 17 தொகுதிகள் ) | 6000/– | 2100/– | 3900/– |
| 2. | ஒன்பதாம் மடலம் இணைப்பு மடலம் (இரண்டு தொகுதிகள்) | 800/– | 280/– | 520/– |
| 3. | பத்தாம் மடலம் அயற்சொல் மடலம் (மூன்று தொகுதிகள்) | 1200/– | 420/– | 780/– |
| 4. | பதினொன்றாம் மடலம் (தமிழ் அகரமுதலி வரலாறு) | 300/– | 105/– | 195/– |
| 5. | பன்னிரண்டாம் மடலம் (தமிழ்ச் சொற்பிறப்பு நெறிமுறைகள்) | 400/– | 140/– | 260/ |
| 6. | செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி சுருக்கப்பதிப்பு | 1000/– | 350/– | 650/– |
| 7. | தமிழ் வினைச்சொல் அகரமுதலி | 500/– | 175/– | 325/– |

**புதிய வெளியீடு**

**செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி**

**திருந்திய பதிப்பு 7 தொகுதிகள்**

**விரைவில் விற்பனைக்கு முன் பதிவு செய்யப்படுகிறது.**

குறிப்பு : தொகையை மொத்தமாக அல்லது வங்கி வரைவோலையாக / காசோலையாக "The Director, Directorate of Tamil Etymological Dictionary Project, Chennai – 600 028" எனும் பெயரில் சென்னையில் மாற்றத்தக்க (Payable at Chennai) வகையில் வழங்கலாம் அல்லது மின்னணு முறையில் வழங்கலாம் (through ECS Payment).
IFSC Code : IDIB000K204 Micr Code : 600019175
Account No. 759144235 (Indian Bank, Indira Nagar Branch, Chennai – 20.)



# அகரமுதலித் தொகுதிகள்

## 35% கழிவு விலையில்

## நூல் விற்பனை

27.09.2024 - 06.10.2024 வரை திருச்சிராப்பள்ளியில் நடைபெற்ற புத்தகத் திருவிழாவில் இயக்ககத் தொகுப்பாளர் கி. இராமர் அவர்களிடமிருந்து அகராதிகளைத் தமிழன்பர்கள் ஆர்வமுடன் வாங்கிச் சென்று பயன்பெற்றனர்.





15.11.2024 - 24.11.2024 வரை தென்காசியில் நடைபெற்ற புத்தகத் திருவிழாவில் இயக்ககத் தொகுப்பாளர் வே. பிரபு அவர்களிடமிருந்து அகராதிகளைத் தமிழன்பர்கள் ஆர்வமுடன் வாங்கிச் சென்று பயன்பெற்றனர்.